## 2 Zum Lobe des Regens

11 Der immerwährende Regen erhält die Welt; preiset ihn deshalb als Trank der Götter*, welcher Unsterblichkeit schenkt.

12 Alle köstliche Nahrung kommet vom Regen; seine Wasser sind dem Menschen köstliches Mahl.

13 Ohne den Regen wütet' auf weiter Erden der Hunger, obgleich sie vom Meer ist umgeben.

14 Die Bauern bestellten nicht länger das Feld, versiegten die Quellen des Himmels.

15 Regen bringet Verderben; Regen aber richtet sie wieder auf, die er vorher verdarb.

16 Kein einziger Grashalm wüchse fortan, öffnete nicht der Himmel die Schleusen.

17 Die Schätze des weiten Meeres wären dahin, nähmen die Wolken nicht seine Wasser und gäben sie ihm als Regen zurück.

18 Den Göttern würde weder geopfert, noch ehrte der Mensch sie an festlichen Tagen, versagten die Wolken der Erde den Regen.

19 Barmherzigkeit und fromme Werke* gäbe es nicht auf der Erden, ließe der Himmel nicht regnen.

20 Ohne den Regen gibt es kein Leben auf Erden; nichts vermag der Mensch ohne ihn.

## 3 நீத்தார் பெருமை

21 ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு.

22 துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

23 இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு.

24 உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

25 ஐந்தவித்தான் ஆற்றல்அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

26 செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

27 சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.

28 நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

29 குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது.

30 அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

## 3 Der Asketen wahrhaftige Größe

21 Die heiligen Schriften verkünden dessen wahrhaftige Größe, der allen weltlichen Freuden entsagte und seine Sinne beherrscht.

22 Niemand kann der Asketen wahrhaftige Größe ermessen, wie niemand die Toten zu zählen vermag.

23 Wer alles Leiden und wahre Freuden erkannte,* entsagte der Welt; er machet die Erde erstrahlen in all ihrem Glanz.

24 Er ist die Saat, bereit für die Felder des Himmels, der seine fünf Sinne beherrscht, wie auch der Leitstock dem Elefanten gebietet.

25 Indra*, der König der himmlischen Mächte, bezeuget selber die Willenskraft derer, die ihre fünf Sinne bezwangen.

26 Die Starken vollbringen, was unmöglich scheint; die Schwachen vermögen es nicht.

27 Fünf Sinne sind Schmecken, Sehen, Berühren, Hören und Riechen; wer sie durchschauet, gebietet der Welt.

28 Der wahrhaft Großen Geheimnis verkünden der Welt die heiligen Schriften.

29 Niemand kann auch nur kurze Zeit den Zorn der Asketen ertragen, die auf dem Gipfel des Bergs der Entsagungen stehen.

30 Asketen sind wahrhaft göttliche Wesen*; sie haben Erbarmen mit allem, was lebt.

## 4 அறன்வலியுறுத்தல்

31 சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு.

32 அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு.

33 ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

34 மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற.

35 அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்.

36 அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை.

37 அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை.

38 வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

39 அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல.

40 செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி.

## 4 Zum Lobe der Tugend

31 Rechtschaffenheit* schaffet Wohlstand auf Erden, und himmlischem Segen bereitet sie Bahn. Ist denn ein größer Gewinn den Menschen beschieden als Rechtschaffenheit?

32 Rechtschaffenheit ist Höchstes auf Erden; sie zu mißachten ist wahrlich verwerflichste Tat.

33 Tu immer und überall Gutes in Worten, Werken und allen Gedanken und allem, was dir an Kräften und Mitteln gegeben.

34 Jedwede Tugend ist darin geborgen, reinen und gütigen Herzens zu sein; alles andre ist seicht und ein protzig Getös'.

35 Tugend erlanget, wer Neid, Habgier, Zorn und bittere Worte nicht kennt.

36 Tu Gutes an denen, die deiner bedürfen, doch warte nicht, bis das Leben sich neigt; Tugend selber wird treu dich begleiten zur Stunde des Todes und drüber hinaus.

37 Nimmer sollst fragen, was gute Werke denn nützen; schaue den Mann in der Sänfte und den, der sich müht mit der Last*.

38 Wer Gutes tut an all seinen Tagen, entkommet gewißlich dem Kreislauf der Wiedergeburten, vergeudet er nicht einen einzigen Tag.

39 Aus rechtschaffenem Leben kommen wahrhaftige Freuden; alles andre ist nichts und endet in Kummer und Leid.

40 Nur das ist von Wert, was auf Rechtschaffenheit gründet; was der Verderbtheit dich preisgibt, laß sein.

## 5 இல்வாழ்க்கை

41 இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

42 துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.

43 தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.

44 பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.

45 அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

46 அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவது எவன்.

47 இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.

48 ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.

49 அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று.

50 வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

## 5 Das Leben des Haushalters

41 Ein guter Haushalter ist dem wahrhaftige Stütze, der den drei Weisungen* folgt.

42 Er ist der Familie wahrhaftig ein Vater, der Heiligen beisteht, den Armen hilft und der Toten* gedenkt.

43 Er ist der Familie wahrhaftig ein Vater, der seine fünf Pflichten getreulich erfüllt: Für die Entschlafenen* bringe er Opfer, diene den Göttern, gastfreundlich sei er, helfe Verwandten und sorge für eigenes Wohl.

44 Der Same* dessen wird nimmer vergehen, der Unrecht vermeidet und seine Pflichten als Gastfreund erfüllt.*

45 Wohnen Tugend und Liebe im Haus, ist es vollkommen, sein Ziel ist erfüllt.

46 Wer seine Pflichten getreulich erfüllt, hat alles erreicht; nichts mehr im Leben gewinnt er hinzu, zöge er auch ein anderes vor.*

47 Wer Erlösung erstrebt,* ist wahrhaftig groß; größer ist aber, wer rechtschaffen ist und seine Pflichten getreulich erfüllt.

48 Wer seine Pflichten getreulich erfüllt und anderen beisteht, Buße zu tun, ist größer als jene*, die Rettung suchen im Fasten und Beten.

49 In Haushalters Leben ist Tugend besonders begründet; doch auch der Wandel in anderem Stande ist gut, ist er ohne Tadel.

50 Wer pflichtbewußt und rechtschaffen ist, wird wahrhaft als Gott unter Menschen gepriesen.

## 6 வாழ்க்கைத் துணைநலம்

51 மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

52 மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.

53 இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை.

54 பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.

55 தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

56 தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

57 சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

58 பெற்றாற் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு.

59 புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

60 மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

## 6 Vom Segen einer guten Ehefrau

51 Die gute Frau hat alle weibliche Tugend;* ihres Mannes Vermögen vergeudet sie nicht.

52 Kommet die Frau ihren weiblichen Pflichten nicht nach, sind alle anderen Segnungen nichts.

53 Wo herrschet die Armut, ist die Frau würdig; wo herrschet der Wohlstand, ist sie es nicht?

54 Welch größeres Gut ist hienieden beschieden als eine Frau, die zugetan ist dem Manne in immerwährender Treu'?*

55 Die Frau, die zuerst ihren Mann und dann die Götter verehrt, sobald sie erwacht, kann gar der Regenwolke gebieten.

56 Die Frau ist zu preisen, die ihre Reinheit bewahrt, in liebender Sorge dienet dem Mann und beider guten Ruf achtet.

57 Verschlossene Türen* nützen nichts, die Reinheit der Frau zu bewahren; bester Schutz ihrer Tugend ist Standhaftigkeit.

58 Die Frau wird gar von den Göttern verehrt, hat sie einem Sohne das Leben geschenkt.*

59 Achtet die Frau ihrer Reinheit nicht, kann nimmermehr aufrechten Hauptes der Mann seinen Freunden begegnen.

60 Ein tugendhaft Weib ist höchster Segen; würdige Kinder sind seine herrliche Zier.

## 7 மக்கட்பேறு

61 பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற.

62 எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

63 தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்.

64 அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

65 மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

66 குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்.

67 தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

68 தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

69 ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

70 மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனுஞ் சொல்.

# 7 Kinder

61 Es gibt keinen größeren Segen als Kinder, die ausgestattet sind mit Verstand.

62 Kein Unheil kann dem bis zur siebenten Wiedergeburt* widerfahren, des Kinder mit reinem Wesen gesegnet.

63 Kinder sind wahrlich ein kostbares Gut; den Eltern geben sie alles weiter, was sie erwarben.*

64 Berühren Kinderhände das Essen, ist köstlicher es als ein göttliches Mahl.*

65 Dem Leib ist es höchstes Entzücken, berühren ihn Kinder; dem Ohr ist Entzücken das kindliche Wort.

66 Flötenklang und der Laute Ton sind lieblich für sie, die nie der kindlichen Rede gelauscht.

67 Der Vater mache den Sohn würdig, Erster zu sein unter Weisen.

68 Den Eltern ist es ein Segen, und mehr noch der Welt, im Schatten der Klugheit der Kinder zu weilen.

69 Die Freude der Mutter ist groß, hat sie einem Sohne das Leben geschenkt; größer ist ihre Freude zu hören, rechtschaffen sei er und klug.

70 Der Sohn mache alle Welt fragen, welcher Verdienste aus Buße wegen der Vater gesegnet wurde mit solch einem würdigen Sohn.

## 8 அன்புடைமை

71 அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

72 அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

73 அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு.

74 அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

75 அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு.

76 அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

77 என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

78 அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று.

79 புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு.

80 அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

71 Welch Riegel vermag der Liebe die Pforten zu schließen? In Liebender Tränen wird Lieb' offenbar.

72 Wer nicht liebt, lebt nur für sich selbst; wer aber liebt, gibt auch sein Leben für andere hin.

73 Sind eins geworden Seele und Leib, wird Liebe geboren; so sprechen die Weisen.

74 Liebe zeugt zuneigend Wesen; aus zuneigend Wesen kommet der Freundschaft kostbares Gut.

75 Dem werden himmlische Wonnen zuteil, der in seinem Leben auf Erden voll liebender Zuneigung war; so sprechen die Weisen.

76 Nur Rechtschaffene kennten die Liebe, sagen die Toren; doch auch den Bösegesinnten ist Liebe die treueste Gefährtin.

77 Die Sonne verbrennt den knochenlosen Wurm; gleichsam versenget der Gott aller Tugend* den, der nicht liebt.

78 Eher treibt Blätter ein dürrer Baum auf steinigem Grund, als daß eines Lieblosen Leben* gedeiht.

79 Was hülfe alles äußere Gut*, regierte nicht Liebe die Herzen?

80 Liebe ist der Quell allen Lebens; des Lieblosen Leib ist nur ein von Haut umhülltes Knochengerüst.

## 9 விருந்தோம்பல்

81 இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

82 விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

83 வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.

84 அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்.

85 வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

86 செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

87 இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

88 பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

89 உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு.

90 மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

81 Der einzige Sinn im Streben nach häuslichem Glück liegt darin verborgen, gastfreundlich zu sein.

82 Aße wer gar von der Speise der Götter*, welche Unsterblichkeit schenkt, so teile er sie mit dem Gast.

83 Armut wird niemals den überkommen, der gastfreundlich ist.

84 Lakshmi* selber weilt gerne bei ihm, der seinen Gast mit freundlichem Lächeln umsorgt.

85 Wer zuerst seinem Gast gibt und dann ißt von dem, was übriggelassen, des Land wird tragen reiche Frucht auch ohne die Saat.

86 Die Götter heißen ihn herzlich willkommen, der seinen Gast getreulich umsorgt und wartet auf den, der noch kommt.

87 Wahre Gastfreundschaft ist nicht zu ermessen; allein, einen Gast im Hause zu haben bestimmt ihren Wert.

88 Wer Opfer der Gastlichkeit nicht erbracht, wird bitter bereuen, daß er sich Schätze erwarb; sein Mühen danach war vergeblich gewesen, und niemand wird sein, ihn zu trösten.

89 Wer trotz seines Wohlstands den Gast nicht umsorgt, ist wahrhaftig arm; den Gast nicht zu ehren vollbringen nur Toren.

90 Riechst du den Duft der Anichamblume, welket sogleich sie dahin; gleichsam genügt ein zögernder Blick, den Gast zu verletzen.

## 10 இனியவை கூறல்

91 இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

92 அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொல னாகப் பெறின்.

93 முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்.

94 துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

95 பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.

96 அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

97 நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல்.

98 சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்.

99 இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

100 இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

## 10 Freundliche Rede

91 Der Rechtschaffenen Mund spricht nur freundliche Worte, die voller Güte und ohne Falsch.

92 Mehr noch als große Geschenke* sind freundliche Worte und sanfter, liebreicher Blick.

93 Im freundlichen Blick und gütigen Worten ist Tugend geborgen.

94 Wer freundliche Worte verschenkt, fällt nicht der die Sorgen vermehrenden Armut anheim.

95 Bescheidenheit und freundliche Rede zieren den Menschen, doch nicht ein anderer Schmuck.

96 Es weichet, was nicht zur Tugend gehört, und zunimmt die Rechtschaffenheit, redet gar freundlich der Mensch und heget nur gute Gedanken.

97 Freundliches Wort bringt Gutes hervor; Tugend* verleiht es und Segen.

98 Freundliches Wort, das niemanden kränkt, bringt Gutes in dieser und anderer Welt.

99 Wer einmal die Freude verspüret, die freundliche Worte bereiten, wie wird er fürderhin sagen, was tief im Herzen verletzt?

100 Wer Worte spricht, die tief im Herzen verletzen, wenn freundliches Wort doch genügt, wählt statt der reifen die unreife Frucht.

## 11 செய்ந்நன்றி அறிதல்

101 செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது.

102 காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

103 பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

104 தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

105 உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

106 மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.

107 எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

108 நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

109 கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும்.

110 எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

## 11 Dankbarkeit

101 Sehet die Hilfe, ohne Verpflichtung erwiesen: Himmel und Erde sind wahrlich zu arm, sie zu vergelten.

102 Hilfe in höchster Not mag gering scheinen, sie wieget doch schwerer als alle Welt.

103 Sehet die Hilfe, erwiesen ohne Gedanken an Lohn: Verglichen mit ihr, scheint das Weltenmeer klein.

104 Wie ein Hirsekorn klein mag die Hilfe auch sein; dem Würdigen ist sie so groß wie ein Baum*

105 Nicht der Umfang bestimmt den Wert der barmherzigen Tat; des edle Gesinnung, der sie erfährt, ist ihr Maß.

106 Vergiß nicht die Freundschaft derer mit lauteren Herzen; verlasse sie nicht, die treu zur Seite dir standen in Stunden der Not.

107 In Dankbarkeit werden die Würdigen derer gedenken bis in die siebente Wiedergeburt*, die ihnen getreulich zur Seite standen in Stunden der Not.

108 Erinn're dich ständig daran, was man dir Gutes getan; erlittenes Unrecht aber vergiß.

109 Gar tödliches Unrecht wird dem nicht vergolten, der sich einer einzigen Wohltat dessen erinnert, der sie erwies.

110 Von allem Bösen, das jemals begangen, gibt es Erlösung; dem Undankbaren aber ist sie verwehrt.

## 12 நடுவுநிலைமை

111 தகுதி எனவொன்று நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின்.

112 செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப்பு உடைத்து.

113 நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

114 தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும்.

115 கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

116 கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுஒரீஇ அல்ல செயின்.

117 கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

118 சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி.

119 சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்.

120 வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின்.

## 12 Gerechtigkeit

111 Gerechtes Maß zu halten ist wichtigster Weg für ein rechtschaffen Leben, das jedem das gibt, was ihm gebührt, ob Fremder, Freund oder Feind.

112 Der Wohlstand eines Gerechten kann nimmer vergehen; er mehret sich selbst der entferntesten Nachkommenschaft.

113 Rühre nicht an den Wohlstand, erworben auf unredliche Art, bringt er auch großen Gewinn.

114 Die Würdigen werden an ihren Nachkommen erkannt; ebenso weiß man, wer unwürdig ist.

115 Gutes und Schlechtes kommt über jeden;* es lässet der Weise von der Gerechtigkeit nicht.

116 Der Untergang des, der ungerecht ist und Partei ergreift für diesen und jenen, nahet behend.

117 Die Welt schaut nicht verächtlich herab auf die Armut eines Gerechten.

118 Der Waagebalken zeiget Gerechtigkeit an; er gleichet dem Weisen, der sich nicht neigt nach der einen und anderen Seite.

119 Der Spruch des Gerechten wird nicht in Zweifel gezogen, ist aufrecht sein Wort und tönt nicht nur so.

120 Sehet den Kaufmann, der zum Wohle anderer handelt, als ob es sein eigenes wär': Gedeihen wird alles, was er beginnt.

# 13 அடக்கமுடைமை

121 அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

122 காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு.

123 செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின்

124 நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

125 எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

126 ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.

127 யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

128 ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும்.

129 தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு.

130 கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

## 13 Selbstbeherrschung

121 Selbstbeherrschung führt zu der Unsterblichen Ort; Unbeherrschtheit ist Weg in endlose Nacht*.

122 Hüte die Selbstbeherrschung wie kostbaren Schatz; es ist dem Menschen auf Erden kein höheres Gut.

123 Wer mit der Weisheit der Weisen die Welt hat durchschaut und selbstbeherrscht ist, dem werden Weisheit und anderer Segen zuteil.

124 Wer seine Leidenschaften bezwungen und nimmermehr weichet vom Pfade der Pflicht, ist größer gar als ein Berg.

125 Demut gereicht allen Menschen zum Segen; dem Reichen stehet sie gut als besondere Zier.

126 Wer wie die Schildkröte seine fünf Sinne beherrscht,* hob einen Schatz, der bis in die siebente Wiedergeburt* nicht vergeht.

127 Was immer du nicht im Zaume hältst, beherrsche doch deinen Mund; die zügellose Zunge stürzt dich in elende Not.

128 Fügt auch nur eins deiner Worte anderen Leid zu, war all dein Mühen nach Tugend vergebliches Tun.

129 Die Brandwunde heilt mit der Zeit; die Wunde, durch Worte geschlagen, wird nimmer vernarben.

130 Rechtschaffenheit selber sucht den zu sehen, der Weisheit und Selbstbeherrschung erwarb und elenden Zorn aus seinem Herzen verbannt.

## 14 ஒழுக்கமுடைமை

131 ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

132 பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை.

133 ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

134 மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

135 அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு.

136 ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

137 ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

138 நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

139 ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

140 உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

## 14 Sittliches Verhalten

131 Wer sittlich Verhalten nicht läßt, wird von allen geehrt; kostbarer gar als das Leben ist es.

132 Wache voll Eifer über dein sittlich Verhalten; es ist kein größerer Beistand gegeben, was immer an Tugend du suchst.

133 Ein sittlich Verhalten bezeugt edle Herkunft, niedriges aber gesellt dich zu den Gemeinen*.

134 Wer auch vergessen, was je er gelernt, mag Wissen wiedererlangen; abgefallen vom rechtschaffenen Weg, bleibt er erniedrigt im Stand der Gemeinen.*

135 Wohlstand ist nicht für die Neider; Würde ist nicht für Menschen mit niederem Sinn.

136 Die Aufrechten lassen nicht von der Tugend; sie kennen das Unheil, das sie sonst befällt.*

137 Wer recht sich verhält, wird von allen geehrt; der anderen Schicksal ist elende Schmach.

138 Ein sittlich Verhalten ist Saat für das Glück*; schlechtes Verhalten ist Mutter endlosen Leids.

139 Den Lippen des Reinen entweichet selbst unbedacht nicht schändliches Wort.

140 Toren sind, die nicht lernten, sich recht zu verhalten, und seien sie noch so gelehrt.

# 15 பிறனில் விழையாமை

141 பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல்.

142 அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல.

143 விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.

144 எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்.

145 எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

146 பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

147 அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

148 பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.

149 நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார்.

150 அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

## 15 Ehebruch

141 Die Torheit, eines anderen Frau zu begehren, begehet er nicht, der Tugend und Wohlstand erstrebt.

142 Unter den Männern, die Tugend verletzen, gibt 's keinen größeren Toren als den, der die Schwelle des anderen heimsucht, die Ehe zu brechen.

143 Wahrlich, im Rachen des Todes ist er gefangen, der das Haus des Mannes, der ihm vertraut, gar heimsucht, die Ehe zu brechen.

144 Was nützet es dem bedeutenden Manne, bricht er die Ehe und denkt nicht daran, daß daraus nur Schande* entsteht!

145 Wer die Frau eines anderen Mannes verführt, und hat er auch dabei leichtes Spiel, des Name ist für alle Zeiten beschmutzt.*

146 Der Ehebrecher entkommt nicht den Vieren: dem Haß, der Sünde, der Furcht und der Schmach.

147 Er ist ein wahrer Vater seiner Familie, der nicht dem Liebreiz der Frau eines anderen Mannes verfällt.

148 Mehr noch als rechtschaffen, heilig ist, wer standhaft der Gier widersteht nach der Frau eines anderen Mannes.

149 Wer niemals die Frau eines anderen Mannes verführt, verdienet gewiß, was diese vom Meere umgebenen Welt an Segen verströmt.

150 Wer sich auch allen schändlichen Lastern ergibt, der handelt doch recht, wenn er die Ehe nicht bricht.

## 16 பொறையுடைமை

151 அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

152 பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று.

153 இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

154 நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும்.

155 ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

156 ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

157 திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று.

158 மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல்.

159 துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.

160 உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்.

## 16 Geduld*

151 Die Erde erduldet, die tief in ihr graben*; erdulde ebenso jene, die dich verachten und schmähen. Das ist höchste Tugend fürwahr.

152 Ertrage geduldig das Unrecht, das dir widerfahren; besser ist 's aber, daß du es vergißt.

153 Den Gast nicht zu ehren ist schändlichste Armut; geduldig die Dummheit der Toren zu tragen ist mächtigste Kraft.

154 Willst du deine Würde bewahren, ertrage geduldig, wenn Widersacher dich schmähen.

155 Die Weisen mögen nichts wissen von denen, die Rache üben für erlittene Schmach; wer Unrecht geduldig erträgt, den achten sie hoch wie das Gold.

156 Die Freude an Rache währet nicht lang; wer Unrecht geduldig erträgt, wird bis zum Ende der Tage gerühmt.

157 Hast du auch großes Unrecht erlitten, wolle nicht Gleiches mit Gleichem vergelten und nicht über Rache nachsinnen.

158 Besiege sie alle durch Großmütigkeit, die dich in stolzem Dünkel gekränkt.

159 Wer der Welt entsagte, ist heilig; heiliger ist, wer das verletzende Wort des Verleumders geduldig erträgt.

160 Wer Buße tut und fastet, ist groß; geringer ist er als sie, die kränkendes Wort des Verleumders geduldig ertragen.

## 17 அழுக்காறாமை

161 ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு.

162 விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.

163 அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான்.

164 அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து.

165 அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது.

166 கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

167 அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

168 அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

169 அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

170 அழுக்கற்று அகன்றாரும் இல்லைஅஃது இல்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்.

## 17 Neidlosigkeit

161 Tugend erlanget, in dessen Herzen nicht zehret der Neid.

162 Es ist kein größerer Segen beschieden, als wenn im Herzen nicht zehret der Neid.

163 Er sorget sich nicht um Tugend und Wohlstand, der neidisch fremdes Vermögen begehrt.

164 Die Weisen begehen nichts Böses aus Neid; sie kennen das Unheil, das daraus entsteht.

165 Es bedarf keines Feindes, den zu vernichten, der neidet; Neid vermag es allein, ihn zugrundezurichten.

166 Wer nicht erträgt, wenn andere freigiebig sind, dessen Familie wird betteln um Nahrung und Kleidung und wird für immer vergehen.

167 Lakshmi* meidet die Neider und stellt sie der Obhut der älteren Schwester* anheim.

168 Dem Neid folget Armut behend; Neid verleitet zu schändlichem Tun, von dessen höllischer Frucht es Erlösung nicht gibt.

169 Darob ist ernsthaft zu sinnen, ob es den Reichtum der Neider und ob es der Rechtschaffenen Armut überhaupt gibt.

170 Neid hat noch niemals Vermögen geschaffen und niemals des Neidlosen Wohlstand geraubt.

## 18 வெஃகாமை

171 நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்.

172 படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

173 சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

174 இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

176 அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக்கெடும்.

177 வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

178 அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

179 அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந் தாங்கே திரு.

180 இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு.

## 18 Habgier

171 Wen es nach anderer Wohlstand gelüstet, den werden viele Übel befallen, und seine Familie muß elend vergehen.

172 Es gelüstet sie nicht nach anderer Gut, und sie begehen nicht schändliches Werk, die sich vom Bösen abwenden.

173 Wer wahre, beständige Freuden erstrebt, begehet nicht Unrecht und lässet geringer Freuden falschen Gewinn.

174 Die Weisen, die ihre fünf Sinne bezwangen, lechzen nicht nach anderer Wohlstand, und wären sie selber in Not.

175 Was nützt alles Wissen, so tief es auch sei, geleiten dich Habgier und schändliches Tun!

176 Wer himmlischen Segen erfleht, geht elend zugrund, begehrt er unredlich fremden Besitz.

177 Begehre nicht Wohlstand, aus Habgier erwachsen; die Frucht ist bitter, die Freude ist kurz.

178 Soll Wohlstand sich mehren, begehre nicht fremden Besitz.

179 Der Weise weiß, was gut und gerecht und trachtet nicht nach fremden Besitz; Lakshmi* selber weilet bei ihm.

180 Wen es gelüstet nach fremden Besitz, muß elend verderben; wer standhaft der Gier widersteht, wird strahlend frohlocken.

# 19 புறங்கூறாமை

181 அறங்்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது.

182 அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

183 புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்.

184 கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லறக்
முன்இன்று பின்நோக்காச் சொல்.

185 அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

186 பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும்.

187 பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

188 துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.

189 அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை.

190 ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.

## 19 Verleumdung

181 Wer Tugend verachtet und schändlichen Frevel begeht, tuet doch gut, wenn er nicht heimlich verleumdet.

182 Schändlich ist es, vom Guten zu lassen und Böses zu tun; ein falsches Lächeln aufzusetzen, doch hinterrücks zu verleumden, fordert weit größ're Verachtung.

183 Besser ist 's, auf der Stelle zu sterben, als von Verleumdung und Lüge zu leben; solch Tod bringt mit sich die Früchte der Rechtschaffenheit.

184 Hinterrücks zu verleumden, laß sein, erlittest du gleichwohl offene Schmach.

185 Plappert der Mund von Rechtschaffenheit, verrät doch die Zung', die verleumdet, niedriges Wesen.

186 Wer hinterrücks verleumdet, dessen verwerflichste Frevel kommen ans Licht.

187 Mit Abscheu wenden die Lieben sich ab vom Verleumder; angewidert wenden selbst gute Freunde sich fort.

188 Wer Frevel und Laster der Freunde verkündet, wie wird er mit Fehlern der Gegner umgehen?

189 Glaubet die Erde wahrhaftig, sie müsse das Joch des Verleumders geduldig ertragen, der hinterrücks üble Nachrede treibt?

190 Kann denn noch irgendein Unheil dem widerfahren, der Fehler der anderen sieht, als wären es seine?

# 20 பயனில சொல்லாமை

191 பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்.

192 பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கண் செய்தலின் தீது.

193 நயனிலன் என்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கும் உரை.

194 நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லா ரகத்து.

195 சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

196 பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி யெனல்.

197 நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

198 அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்.

199 பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர்.

200 சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

## 20 Eitles Geschwätz

191 Wer seine Zuhörer ärgert durch eitles Geschwätz, wird von allen verachtet.

192 Leeres Geschwätz ist schlimmer, als Freunden Böses zu tun.

193 Wer hohle Worte daherschwätzt, der zeigt aller Welt, daß er keine Würde besitzt.*

194 Wer hohle Worte daherschwätzt, gibt auf, was Gutes ist ihm.

195 Die Würdigen verlören Ansehen und Ruf, gäben sie seichter Worte sich hin.

196 Wer sich in leerem Geschwätz ergeht, verdient nicht den Namen als Mensch; eher ist er unter Menschen die Spreu.

197 Mögen die Weisen auch sagen, was andern mißfällt, sie geben nicht von sich seichtes Geschwätz.

198 Die Weisen trachten, das Dunkel zu lichten; sie sprechen kein Wort ohne tieferen Sinn.

199 Wer wahrhaftig sieht, spricht selbst aus Versehen kein unnützes Wort.

200 Sprichst du, sag Worte, die 's wert sind, doch niemals ein unnützes Wort.

## 21 தீவினையச்சம்

201 தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னுஞ் செருக்கு.

202 தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

203 அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.

204 மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.

205 இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து.

206 தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான்.

207 எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்று அடும்.

208 தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடிஉறைந் தற்று.

209 தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.

210 அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்.

## 21 Die Furcht, Böses zu tun*

201 Wer einmal Böses getan, wird 's auch fortan nicht lassen; die Guten aber fürchten, Böses zu tun.

202 Die Frucht verwerflicher Taten ist, wiederum Böses zu tun; fürchte es mehr als das Feuer.*

203 Selbst einem Feinde vergelte nicht Böses mit Bösem; nie wurde uns höhere Weisheit gesagt.

204 Wolle auch nicht unbedacht den Untergang eines andern; zugrunde muß gehen, wer Böses ersinnt.

205 Wolle auch nicht der Armut entgehen durch schändliches Tun; in tieferes Elend wirst du versinken.

206 Wer begehrt, daß ihn kein Übel befalle, tue auch seinem Nächsten kein Leid.

207 Es gibt immer Wege, dem Feind zu entkommen; doch niemand entgehet vernichtender Strafe für schändliches Tun.

208 Wie dein Schatten nicht weichet von dir auf all deinen Wegen, folgt dem die Vernichtung, der Böses begeht.

209 Wer Wohlergehen für sich begehret, sinne nicht, Böses zu tun, was Böses es immer auch sei.

210 Das Unheil flieht den, der nimmermehr weichet vom Pfade der Rechtschaffenheit und nicht tut dem andern ein einziges Leid.

# 22 ஒப்புரவறிதல்

211 கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றுங் கொல்லோ உலகு.

212 தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

213 புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

214 ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

215 ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

216 பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்.

217 மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

218 இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடனறி காட்சி யவர்.

219 நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு.

220 ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.

## 22 Wohltätigkeit*

211 Wie kann die Welt der Wolke jemals den Regen vergelten? So wollen sie keinen Dank, die freigiebig sind.

212 Alles Vermögen der Würdigen, durch ihrer Hände Arbeit erworben, diene anderer Wohl.

213 Es ist hienieden kein größer Verdienst zu erwerben und auch in nicht anderer Welt, als anderen Gutes zu tun.

214 Wer weiß, was sich ziemt*, der lebet gewiß; die anderen gleichen den Toten.

215 Der bis zum Rande mit Wasser gefüllte Brunnen im Dorf gleichet dem Wohlstand der Weisen, die wissen, was sich geziemt in der Welt.

216 Des Freigiebigen Wohlstand gleicht einem Baum im Herzen des Dorfes, der reiche Frucht trägt.

217 Wohlstand in Händen hilfreicher Menschen gleicht einem Baum, der gute Arznei für alle erbringt.

218 Wer seine Pflichten erfüllt und weiß, was ist recht, und fiele er auch der Armut anheim, wird dennoch anderen helfen.

219 Der Hilfsbereite glaubt, er sei arm, kann er denen, die seiner bedürfen, nicht dienen.

220 Trifft ihn die Armut, weil er anderen half, ist er doch reich; ein jeder möchte solche Armut erlangen.*

## 23 ஈகை

221 வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

222 நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

223 இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.

224 இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணும் அளவு.

225 ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.

226 அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

227 பாத்தூண் மரிஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது.

228 ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

229 இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.

230 சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

## 23 Barmherzigkeit

221 Den Armen zu geben ist wahrhaft barmherzig; andere Gaben sind nur geliehen auf Zeit.

222 Führte es auch in die himmlischen Welten, ist es doch schlecht, wenn du nur nimmst; wäre für immer der Himmel* verschlossen, den Armen zu geben ist gut*.

223 Der Hochherzige* gibt freudigen Herzens*; nimmer wird ihn der Geiz übermannen und also sprechen: "Ich habe doch nichts."

224 Das Herz des Gebers ist dann erst froh, sieht er im Antlitz des Armen die Freud'.

225 Größter Sieg über Hunger ist Sieg durch die Buß'; er ist doch geringer, als bitteren Hunger der Armen zu stillen.

226 Sicherster Hort für eigenen Wohlstand ist das Erbarmen, den bitteren Hunger der Armen zu stillen.

227 Schwerstes Gebrechen ist elender Hunger; wer doch gelernt hat, sein Brot mit den Armen zu teilen, den treffet er nicht.

228 Geizhälse horten den Reichtum, verlieren ihn wieder; sie haben nichts von der Freude verspürt, den Armen zu geben.

229 Des Geizhalses einsames Mahl ist bitterer gar als des Bettelnden Brot.

230 Nichts ist bitterer als der Tod; wer nichts hat, die Not der Armen zu lindern, sagt ihm ein herzlich Willkomm.

## 24 புகழ்

231 ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு.

232 உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ்.

233 ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல்.

234 நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.

235 நத்தம் போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.

236 தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

237 புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன்.

238 வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.

239 வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

240 வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

## 24 Ruhm

231 Es ist kein größer Gewinn, als den Armen zu geben und so seinem Namen Ruhm zu verleihen.

232 Es preisen die Weisen und rühmen den, des Herz vor Erbarmen überfließt für die Armen.

233 Auf Erden muß alles vergehen; doch alle Zeit währet für große Taten unvergleichlicher Ruhm.

234 Wer dauernden Ruhmes teilhaftig, den ehren die Götter mehr als unsterbliche Seelen, die bei ihnen sind.

235 Armut und Tod bringen Ehren und Ruhm; sie sind der Weisen Schicksal allein.

236 In diese Welt geboren, erwerbe der Mensch höchste Ehren und Ruhm; es wäre sonst besser, es gäbe ihn nicht.

237 Wer keine Ehren erwirbt, der wüte gegen sich selbst und nicht gegen die, so ihn tadeln.

238 Wer keine Ehren erwirbt, die seine Zeit überdauern, lebet in Schande und Schmach.

239 Ein Land, das unter der Last seines ehrlosen Volkes erbebt, wurd' es auch ob seines Wohlstands gerühmt, fällt bitterster Armut anheim.

240 Wem nicht der Ruf der Schande vorauseilt, lebet wahrhaftig; die anderen gleichen den Toten.

## 25 அருளுடைமை

241 அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள.

242 நல்லாற்றால் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை.

243 அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்.

244 மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை.

245 அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.

246 பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.

247 அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு.

248 பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது.

249 தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்.

250 வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து.

## 25 Erbarmen*

241 Größte Fülle ist ein Herz, das überfließt vor Erbarmen; irdischen Wohlstand haben sogar die Gemeinen*.

242 Wer erkannt hat, welch Weg für ihn gut ist, sei voller Erbarmen auch gegen den, der anderen Heilswegen folgt; Rettung ist Mitleid allein.*

243 Sie treten nicht ein in die bittere Welt voller Dunkel, in deren Herzen Erbarmen regiert.

244 Wer voller Erbarmen das Leben beschützt, des Seele erzittert nicht vor der Frucht des eignen, verwerflichen Tuns.

245 Wer voller Erbarmen, den suchet nicht Not; die fruchtbare, weite, vom Winde durchwandelte Erde ist unbestechlicher Zeug'.

246 Menschen mit steinernen Herzen haben vergessen, was sie in früheren Leben aus eigen Verschulden gelitten; so sprechen die Weisen.

247 Wer ohne Erbarmen, dem bleiben andere Welten verwehrt wie auch den Armen auf Erden die Freud'.

248 Wen Armut geschlagen, mag sich eines Tages von ihr befreien; wes Herz ohn' Erbarmen, ist wahrhaftig arm, und der Vernichtung fällt er für immer anheim.*

249 Wer Weisheit nicht hat, kann schwerlich die Wahrheit erkennen; wes Herz ohn' Erbarmen, kann schwerlich Tugend erlangen.

250 Wer Sinnes ist, die Schwachen zu knechten, mag sich erinnern, wie er vor den Starken erbebt'.

# 26 புலால் மறுத்தல்

251 தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்.

252 பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு.

253 படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம்.

254 அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்.

255 உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு.

256 தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊனதருவார் இல்.

257 உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ணது உணர்வார்ப் பெறின்.

258 செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்.

259 அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.

260 கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்.

## 26 Nicht Fleisch essen*

251 Wer Fleisch frißt, um seinen Körper zu mästen, ist ohne Erbarmen.

252 Wer Fleisch frißt, ist ohne Erbarmen, wie gleichsam der Reichtum nicht beim Verschwender* verbleibt.

253 Wer Fleisch frißt von toten Geschöpfen*, ist ohne Erbarmen; als griff' er zur tödlichen Waffe, so grausam ist er.

254 Tiere zu töten ist wahrhaftig grausame Tat; es ist ein abscheulicher Frevel*, das zu genießen, was durch Töten entsteht.

255 Fleisch nicht zu fressen bedeutet, Leben zu wahren; der Schlund der Verdammnis wird nimmer sich öffnen, den auszuspeien, der tote Tiere gefressen.

256 Wer tötete fortan wegen des schnöden Gewinns, wenn niemand Fleisch kaufte, um es zu fressen?*

257 Wer es erkannte, aus welch tiefer Wunde das Fleisch ward gerissen,* wird 's nimmermehr fressen.

258 Wer Fesseln der Täuschung entkommen und Unwissenheit hat besiegt, der frißt nicht das Fleisch dahingeschlachteter Tiere.

259 Tausend heilige Opferfeuer in Gottesdiensten zu zünden ist gut; weit besser ist es, niemals zu töten und nie tote Tiere* zu fressen.

260 Alle Welt faltet voll Andacht die Hände; sie huldigt dem, der nicht tötet und Fleisch, aus dem das Leben gewichen, nicht frißt.

## 27 தவம்

261 உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு.

262 தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம் அதனை
அஃதிலார் மேற்கொள் வது.

263 துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்.

264 ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்.

265 வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

266 தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு.

267 சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

268 தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாம் தொழும்.

269 கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

270 இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

## 27 Buße*

261 Wahrhaftige Buße bedeutet, das Leiden geduldig zu tragen und allem, was lebt, kein Leid anzutun.

262 Er kann wahrhaftige Buße verrichten, der in seinen früheren Leben durch Buße Verdienste erwarb; die andern vermögen es nicht.

263 Nicht jeder mag leben im Stande eines Asketen; sie haben erkannt, daß es Menschen muß geben, die den Asketen Nahrung, Kleidung und Obdach gewähren.*

264 Wer strafet den, der Asketen bekämpft, und wer erhöht, den sie lieben? Wisse, solch Macht ist allein den Asketen gegeben.

265 Heiligmäßig zu leben auf Erden ist Weg, jedwedes Verlangen zu stillen in dieser und anderer Welt.

266 Wer Buße verrichtet, tilgt seine Schuld; die anderen sind der Begierde verfallen und in der Schlinge des Wohlstands gefangen und schaden sich selbst.

267 Je heißer das Feuer brennt in der Schmelze, desto reiner leuchtet das Gold; je strenger aber die Buße ist, desto heller erstrahlet des Büßenden Licht*.

268 Wer Herrschaft über sich selbst durch strenge Buße erlangt, dem huldigt alles, was lebt.

269 Wer Buße tut, erlanget wahrhaftige Stärke; er vermag, selbst den Tod zu besiegen.

270 Wenige sind mit Reichtum gesegnet, und viele erleiden bittere Not; denn wenige nur verrichten Buße, und viele tun ’s nicht.

## 28 கூடா ஒழுக்கம்

271 வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.

272 வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தான்அறி குற்றப் படின்.

273 வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.

274 தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.

275 பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்று
ஏதம் பலவுந் தரும்.

276 நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

277 புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து.

278 மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

279 கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன
வினைபடு பாலால் கொளல்.

280 மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்.

## 28 Heuchelei

271 Die fünf Elemente des Leibes* verspotten der Heuchler geheimes Gehabe.

272 Was nützt die Erscheinung, die Heiligkeit heuchelt? Das Böse wohnt dennoch darin.

273 Wer Heiligkeit heuchelt, gleicht einer friedlich grasenden Kuh im Fell eines Tigers.

274 Wer Heiligkeit heuchelt und Böses begeht, gleichet dem listigen Vogelfänger im dunklen Gesträuch.

275 Der Scheinheilige heuchelt, er habe die Leidenschaften besiegt; es kommet der Tag, an dem wird er klagen: "Wehe, was hab' ich getan!"

276 Keinen gemeineren Schurken gibt es auf Erden als den, der Heiligkeit heuchelt und vorgibt, er sei den Schlingen der Welt schon entrückt.*

277 Des Kunri-Samens eine Seite ist hell, die andere aber ist schwarz; so gibt es Menschen, die Heiligkeit heucheln, doch sind sie im Innern verworfen und schlecht.

278 Viele baden in heiligen Wassern und geben vor, auch heilig zu sein; im tiefsten Herzen sind sie verworfen und schlecht.

279 Der Pfeil ist gerade, doch grausam sein Werk, die Laute gebogen, doch lieblich ihr Klang; richte die Menschen nach ihren Taten und nicht nach dem äußeren Schein.

280 Schere das Haupt oder trage dein Haar unbeschnitten,* es ist doch ohne Bedeutung, läßt du von dem, was alle Welt schmäht.

# 29 கள்ளாமை

281 எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.

282 உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்.

283 களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும்.

284 களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.

285 அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.

286 அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர்.

287 களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல்.

288 அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு.

289 அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

290 கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

## 29 Betrug

281 Wer nicht der Schande anheimfallen will, betrüge auch nicht in Gedanken.

282 Verworfen ist es, auch nur in Gedanken fremden Besitz zu erschwindeln.

283 Wohlstand, der auf Betrug nur gegründet, mag scheinbar gedeihen; es kommet die Stunde, da er den Betrüger verläßt.

284 Hunger nach Beute hat endlosen Kummer in seinem Gefolge, wenn einst die Zeit der Vergeltung sich naht.

285 Wer nur darauf lauert, Betrug zu begehen, kennt kein Erbarmen; sein Herz ist aus Stein.

286 Hunger nach Beute lässet nicht wägen, was rechtschaffen ist oder schlecht.

287 Ein rechtschaffen Herz erkannte die Dinge der Welt und gürtete sich mit Rechtschaffenheit; nie wird es der Torheit verfallen, den anderen zu betrügen.

288 Wie Tugend weilet im Herzen des, der Wahrheit erkannt, wohnet die Tücke im Herzen des Diebs.

289 Der Dieb erhält seinen Lohn; er gehet alsbald und elend zugrund.

290 Betrüger verwirken ihr Leben;* Rechtschaffene aber weisen selbst Götter nicht fort.

## 30 வாய்மை

291 வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

292 பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.

293 தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

294 உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்.

295 மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை.

296 பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்.

297 பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

298 புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்.

299 எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

300 யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

## 30 Wahrheit*

291 Was Wahrheit ist? So heißet das Wort, das frei ist vom Bösen, und sei dieses Böse auch noch so gering.

292 Selbst in der Lüge liegt Wahrheit verborgen, bringet sie Gutes hervor.

293 Sprich nicht, es sei Wahrheit, weißt du genau, daß Lüge es ist; dein eigen Gewissen verbrennet dich sonst.

294 Er wird wahrhaftig von allen geliebt, in dessen Herz auch nicht die kleinste Lüge regiert.

295 Wer Wahrheit spricht in Gedanken und Worten, ist größer als jene, die Buße tun und mildtätig sind.

296 Kein höherer Ruhm ist dem Menschen beschieden als der, daß Lüg' ihm ist fremd; jedwede Tugend erlangt er ohn' alle Müh'*.

297 Wer von der Wahrheit nicht läßt, muß sich um andere Tugend nicht müh'n.

298 Wasser reinigt den Leib; die Reinheit des Herzens ist in der Liebe zur Wahrheit geborgen.

299 Nicht alles, was leuchtet, ist Weisen ein Licht; das Licht der Wahrheit ist ihr einziges Licht.

300 Von allem Wahren, was jemals in heiligen Schriften ward kund, wird Liebe zur Wahrheit am höchsten gerühmt.

# 31 வெகுளாமை

301 செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கின்என் காவாக்கால் என்.

302 செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற.

303 மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும்.

304 நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற.

305 தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

306 சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்.

307 சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

308 இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

309 உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்.

310 இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

## 31 Zorn

301 Wer zornig die Schwachen zu schlagen vermag und es dennoch nicht tut, besiegte den Zorn; besiegt er den Zorn aber nicht, ist es gleich, ob er ihn beherrscht oder nicht.

302 Gegen die Starken in Zorn zu geraten ist schlecht; doch gibt es kein größeres Unrecht, als gegen die Schwachen zu rasen im Zorn.

303 Gegen niemanden richte den Zorn, doch trachte, ihn zu besiegen; schweres Leid verursacht der Zorn.

304 Gibt 's einen ärgeren Feind als den Zorn? Er tötet den Frohsinn und Frieden der Seele.

305 Willst du dich bewahren, beherrsche den Zorn; du gehst sonst gewißlich zugrund.

306 Zorn zerstört jeden, den er befällt; unschuldig Wesen aus dessen Familie reißet er mit.

307 Wer den Zorn nährt, als wäre er Teil seiner selbst, des Untergang ist gewiß; er gleicht einem Mann, der in rasender Wut seine Hand auf dem Boden zerschmettert.

308 Fielest du aller Qualen anheim,* als verbrennten dich lodernde Flammen, trachte, den Zorn zu besiegen.

309 Wer jeglichen Zorn auf der Stelle aus seinem Herzen verbannt, gerät an das Ziel all seines Begehrs.

310 Wen der Zorn überwältigt, gleichet den Toten; doch wer ihn besiegt, ist Unsterblichen* gleich, die den Tod überwanden.

## 32 இன்னா செய்யாமை

311 சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

312 கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

313 செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யாமை விழுமம் தரும்.

314 இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்.

315 அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை.

316 இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல்.

317 எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை.

318 தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல்.

319 பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும்.

320 நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

## 32 Niemandem Leid* zufügen

311 Ein Mensch reinen Herzens fügt niemandem Leid zu, gewönne er dafür auch seltenes Gut.

312 Ein Mensch reinen Herzens vergelte nicht Böses mit Bösem, erlitt er auch schwerstes Unrecht aus Haß.

313 Nimmermehr gutzumachen ist Leid, einem Feind angetan, der nicht den Gegner gereizt.

314 Der Frevler ist schon genügend gestraft, beschämst du ihn tief, indem du ihm Gutes erweist.

315 Was nützt dem Menschen alles Wissen, sieht er nicht fremdes Leid als sein eigen und füget es andern nicht zu?

316 Der Mensch tue nichts, wovon er doch weiß, daß es anderen bringet viel Weh.

317 Niemandem jemals wissentlich Leid zuzufügen, und sei es noch so gering, ist wahrhaftig groß.

318 Wer selber Leid erfahren hat, wie kann er es fürderhin anderen tun?

319 Wer andern am Morgen ein Leid angetan, zu dem kehrt 's von selber zur Stunde nach Mittag zurück.

320 Alles Leiden kehret zum Übeltäter zurück; wer Leid nicht selber erfahren will, füge es andern nicht zu.

## 33 கொல்லாமை

321 அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும்.

322 பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை.

323 ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றுஅதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

324 நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி.

325 நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை.

326 கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிருண்ணுங் கூற்று.

327 தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை.

328 நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை.

329 கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

330 உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

## 33 Nicht töten*

321 Höchste Tugend ist, niemals zu töten; Töten hat alles andre verwerfiche Tun in seinem Gefolg'.

322 Höchste Tugend ist, niemals zu töten und immer sein Brot mit den Armen zu teilen; das ist der Weisen wichtigstes Wort.

323 Höchste Tugend ist, niemals zu töten; nur Liebe nach Wahrheit kommet ihr nah.

324 Welches ist der Weg der Erlösung? Es ist jener Pfad, das Leben zu ehren und auch nicht zu töten das kleinste Geschöpf.

325 Wer nicht tötet aus Ehrfurcht vor allem, was lebt, ist größer gar als Asketen, die nur entsagten aus Furcht vor dem Joch der Wiedergeburt.

326 Der Gott des Todes* fordert das Leben nicht vor der Zeit, beherzigt der Mensch das Gebot, nicht zu töten.

327 Fordere nicht das allen Geschöpfen kostbare Leben, müßtest du gleichwohl dein eigenes geben.

328 Mag der Mensch glauben, durch blutige Opfer den Göttern zu dienen, auf daß er Wohlstand und himmlischen Segen erwerbe: Den vollkommen Reinen ist aller Gewinn, durch Töten erfahren, ein Greuel.

329 Aasfresser sind, die leben vom Töten;* sie werden von allen Großen verachtet als die Geringsten.

330 Sehet den Leib, von Armut und Krankheit verzehrt: Er hat in seinem vergangenen Leben getötet. So sprechen die Weisen.

## 34 நிலையாமை

331 நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

332 கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.

333 அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

334 நாளென ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்.

335 நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

336 நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு.

337 ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல.

338 குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு.

339 உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

340 புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு.

## 34 Vergänglichkeit

331 Es gibt keine größere Torheit als die Narretei, Vergängliches so zu betrachten, als habe es ewig Bestand.

332 Es kommet das Glück und entschwindet alsbald; es gleichet den Menschen in einem Theater, die sich nach dem Spiele in alle Winde zerstreuen.

333 Wohlstand zerrinnt in des Menschen Hand; es nutze der Mensch jede Stunde und tue, was ist von Bestand.*

334 Der Tag mißt die Zeit; er sägt beständig am Aste des Lebens.*

335 Es eile der Mensch und tue barmherzige Werke, bevor der Tod seine Arbeit beginnt und der Sterbende röchelt, die Zung' ist gelähmt.

336 Der Mensch war noch gestern, heut ist er nicht mehr; das ist der Lauf dieser Welt, denn alles vergeht.

337 Der Mensch weiß nicht, ob er morgen noch lebt; doch Wünsche hat er zuhauf*.

338 Der Vogel entschlüpft dem zerbrochenen Ei und fliegt fort; das gleichet der Liebe der Seele zum Leib, die gleichsam entweicht, ist ihre Stunde gekommen.

339 Tod ist wie Schlafen; Leben* ist wie Erwachen danach.

340 Die Seele hat keine beständige Bleibe. Warum nur sucht sie zu wohnen in diesem wertlosen Leib*?

## 35 துறவு

341 யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

342 வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல.

343 அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு.

344 இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.

345 மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை.

346 யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

347 பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

348 தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

349 பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்.

350 பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

## 35 Entsagung

341 Welcher Begierde der Mensch auch entsagt, er wird fortan kein Elend erleiden, das kommet aus solcher Begier.

342 Wer weltlichen Freuden beizeiten entsagt, dem werden viel wahre Freuden zuteil.

343 Entsag' den fünf sinnlichen Freuden, entsage vergänglichem Glück, dem Ziel all deines Begehrs.

344 Wer entsaget, verzichtet auf allen Besitz; lässet er nicht auch vom kleinsten Besitz, bleibt er in der Täuschung gefangen und machet die Buße zunicht.

345 Wer dem Kreislauf der Wiedergeburten entkommen will, dem ist der eigene Körper nur Last. Um wieviel mehr noch sind Last alle anderen Fesseln!

346 Die Worte "ich" und "mein" sind eitel und hohl; wer sie überwindet, gelangt in die Welt noch jenseits der Götter.*

347 Kummer und Sorgen sind ständig bei dem, der sich aus der Leidenschaft Fesseln nicht löst.

348 Wer völlig entsaget, erlanget Erlösung; die anderen bleiben im Kreislauf der Wiedergeburten verstrickt.

349 Wer völlig entsaget, entkommet dem Kreislauf der Wiedergeburten; die anderen werden wiedergeboren und sterben.

350 Gehe den Weg des allem innewohnenden Herrn, der ohne Bindungen ist, und hange ihm an; so wirst du die weltliche Fesseln zerreißen und wahrhaftig frei.

## 36 மெய்யுணர்தல்

351 பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு.

352 இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

353 ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து.

354 ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.

355 எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

356 கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

357 ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

358 பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு.

359 சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

360 காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

## 36 Erkenntnis der Wahrheit

351 Täuschung macht glauben, Unwirkliches sei wirklich; Täuschung geleitet die Seele zurück in die Welt voller Weh.

352 Wer das Netzwerk der Täuschung zerrissen und höchste Erkenntnis erlangt, wird nimmermehr wiedergeboren.

353 Wer höchste Erkenntnis erlangt, die Wahrheit erkannt hat und jeglichen Zweifel ablegt, ist himmlischen Freuden näher als irdischem Glück.

354 Obgleich im Leibe wiedergeboren, hat doch die Seele gar nichts gewonnen ohne Erkenntnis der Wahrheit.

355 Wirkliches vom Blendwerk zu scheiden ist wahrhaftig weise.

356 Wer höchste Erkenntnis durch ernsthaftes Trachten erlangt, wird nimmermehr wiedergeboren.

357 Wer Wahrheit erkannt und erkannt hat, was ist, braucht nicht zu verschwenden nur einen Gedanken an Wiedergeburt.

358 Wer nach Vollkommenheit strebet und Wahrheit, ist wahrhaftig weise; er wird der Täuschung entgehen und nimmermehr wiedergeboren.

359 Wer den Weg der Erlösung gehet und Bindungen löst, in die er verstrickt, wird von den Fesseln des irdischen Leidens befreit.*

360 Das Leiden wird enden, sind erst die Begierden, der Zorn und die Dummheit besiegt.

# 37 அவா அறுத்தல்

361 அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

362 வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

363 வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல்.

364 தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

365 அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்றது இலர்

366 அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா.

367 அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

368 அவா இல்லார்க் கில்லாகுந் துன்பம்அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.

369 இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்.

370 ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.

## 37 Der Begierde entsagen

361 Begierde ist fruchtbare Saat für den Kreislauf der Wiedergeburten; ihm ist für alle Zeiten verfallen alles, was lebt.

362 Wer die Begierden besiegt, des Sehnen erfüllt sich gewiß; dem Kreislauf der Wiedergeburten wird er entgehen.

363 Kein höheres Gut ist dem Menschen beschieden, als ohne Begierden zu sein; im Himmel selbst ist ihm kein größerer Schatz.

364 Wer frei ist von aller Begier, erlangt höchste Reinheit; wer die vollkommene Wahrheit erstrebt, erlanget Erlösung.

365 Wer den Begierden entsagt, ist wahrhaftig frei; die andern verharren in Knechtschaft und scheinen nur frei.

366 Wer Tugend erstrebt, der hüte sich vor der Begier; Begierde ist Fallstrick der Täuschung.

367 Wer die Begierden zermalmt, dem wird die Erlösung zuteil, gleich welchen Weg der Entsagung er geht.

368 Kein Übel kann dem widerfahren, der die Begierden zermalmt; doch wer ihnen frönt, den suchet das Elend und lässet ihn nicht.

369 Immerwährende Freuden vermag auch auf Erden der Mensch zu erfahren, besiegt er das größte der Übel, das heißet Begier.

370 Begierde ist unersättlich gefräßig; wer ihr aber trotzet, erlanget Erlösung, und in die Vollkommenheit gehet für immer er ein.

# 38 ஊழ்

371 ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி.

372 பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை.

373 நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்.

374 இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

375 நல்லவை எல்லாஅந் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு.

376 பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

377 வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

378 துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின்.

379 நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்.

380 ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

## 38 Schicksal

371 Dem Fleißigen hat das Schicksal Wohlergehen bestimmt, dem Faulen aber die Not.

372 Widriges Schicksal lähmet den Geist, und seinen Wohlstand verlieret der Mensch; lächelt ihm aber ein holdes Geschick, wachsen ihm der Verstand und Besitz.

373 Es ist der Mensch doch mit Blindheit geschlagen, auch wenn er großes Wissen erwarb; das Schicksal allein bestimmt seinen Weg.

374 Die Welt hienieden zeigt zwei verschieden Gesichter: Erfolg zu haben ist eines, zu Weisheit zu kommen ein zweites.

375 Gutes verkehrt sich in Schlechtes, wenn es das Schicksal so will; Schlechtes verkehrt sich in Gutes, kommt dafür die Zeit.

376 Was das Schicksal verweigert, kann niemand bewahren, gleichwohl er sich müht; verschwendete er auch all sein Vermögen, muß er es dennoch behalten, so es das Schicksal bestimmt.

377 Wer mit Wohlstand* gesegnet, kann sich nur des Reichtums erfreuen, so es das Schicksal bestimmt.

378 Die Armen entsagten gerne der Welt, entkämen sie damit der Not; das Schicksal hat ihnen den Teil ihres Leidens bestimmt.

379 Der Mensch erfreue sich dessen hienieden, was ihm das Schicksal an Gutem gewährt. Warum denn sollte er gram sein, geht es ihm schlecht?

380 Was ist denn so mächtig wie 's Walten des Schicksals? Ersinnt sein Opfer auch Pläne, es zu besiegen, so kommet es ihm doch zuvor.

# 39 இறைமாட்சி

381 படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.

382 அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தர்க் கியல்பு.

383 தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவர்க்கு.

384 அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மானம் உடைய தரசு.

385 இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

386 காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்.

387 இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு.

388 முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்.

389 செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக் கீழ்த்தங்கும் உலகு.

390 கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி.

## 39 Die wahre Größe des Herrschers

381 Ein Löwe unter den Herrschern ist er, der über sechs Dinge verfügt: Soldaten, Untertanen, Vermögen, Ratgeber, Bundesgenossen und wehrhafte Festung.

382 Ein Herrscher soll über vier Eigenschaften verfügen: Freigiebigkeit, Weisheit, Tatkraft und Mut.

383 Drei Tugenden dürfen ihn niemals verlassen, dem Herrschaft auf Erden bestimmt: Wachsamkeit, Wissen und Mut.

384 Rechtschaffen, wagemutig und tapfer, ohne Laster und immer gerecht ist der wahrhaftige Herrscher.

385 Ein wahrer Herrscher mehret den Wohlstand; er hütet ihn treulich und nutzt ihn zum Wohle des Volks.

386 Es preiset die Welt das Land eines Herrschers, der seinem Volke Gehör schenkt und gar die verletzenden Worte verschmäht.

387 Auf Erden erschallet der Ruhm eines Herrschers, der huldvoll in Sanftmut regiert; jedwedes Land auf der Erden, das er begehrt, beugt sich seiner Macht.

388 Er wird als Gott unter Menschen gepriesen, welcher das Volk vor Unheil bewahrt und in Gerechtigkeit herrscht.

389 Die Welt gedeihet unter dem Schild eines Herrschers, der andere Meinung erträgt, so bitter sie seinem Ohre auch sei.

390 Ein strahlendes Licht ist er unter Herrschern, der diesen vier Tugenden folgt: Wohltätig ist er, huldvoll, gerecht und voller Liebe zum Volk.

## ௪௰ கல்வி

391 கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

392 எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு.

393 கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்

394 உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

395 உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

396 தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.

397 யாதானும் நாடாமல் ஊராமல் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

398 ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து.

399 தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

400 கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

## 40 Lernen

391 Erwirb nur Wissen, das wert ist, erworben zu werden, und handle danach.

392 Buchstaben und Zahlen sind der Lebenden Augen.

393 Der Wissende hat zwei Augen, der Unwissende aber zwei offene Wunden* im Kopf.

394 Wenn Kluge einander begegnen, freuen sie sich; geh'n sie voneinander, trauern sie tief.

395 Die Klugen erwerben in Demut ihr Wissen, wenn sie auch gleichen den Bettlern, die Reichen begegnen; die Niedrigsten aller Niedrigen sind, die nicht lernen.

396 Wissen ist wie ein Brunnen im Sand; je tiefer man gräbt, desto reicher sprudelt der Quell.

397 Der Wissende hat überall sein Zuhaus und sein Land. Warum denn wollen Menschen nicht lernen bis in den Tod?

398 Erworbenes Wissen wird seinen Träger treulich begleiten bis in die siebente Wiedergeburt*.

399 Wer Wissen erworben, hat Freude am Lehren; er gibt sein Wissen an andere weiter, und das ist ihm Freud'.

400 Wissen ist unvergänglicher Quell tiefen Glücks; kein anderes Gut gleichet ihm.

# 41 கல்லாமை

401 அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

402 கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.

403 கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.

404 கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்.

405 கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

406 உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

407 நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று.

408 நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.

409 மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு.

410 விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.

## 41 Unwissenheit

401 Ohne genügend zu wissen ans Rednerpult gehen gleicht einem Würfelspiel auf dem Brett ohne Feld.

402 Ein Dummkopf, der sich erhebt, eine Rede zu halten, gleicht einer Frau ohne Brüste, welche die Blicke der Männer auf sich lenken will.

403 Ein Tor wird doch weise genannt, wenn er vor den Wissenden schweigt.

404 Ein Mensch ohne tieferes Wissen mag noch so klug scheinen; den Weisen bleibet er dumm.

405 Wagt es der Dumme, der weise sein will, vor Klugen zu sprechen, stürzt seine Eitelkeit ihn in Schande, sobald er auftut den Mund.

406 Die Dummen sind wie wüstes Land ohne Ernten; von ihnen weiß man nur, daß sie leben, sonst nichts.

407 Die Pracht eines Menschen ohne tieferes Wissen ist wie die Schminke einer Puppe aus Ton.

408 Bitter ist Armut, befällt sie den Klugen; weit schlimmer ist Reichtum in Händen des Dummen.

409 Ist auch der Dumme von edler Geburt, er wird nicht geachtet wie Kluge aus niederem Stand.

410 Um wieviel mehr sind Menschen als wildes Getier? Um soviel sind die Klugen mehr als die Dummen.

# 42 கேள்வி

411 செல்வத்துள் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை.

412 செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.

413 செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து.

414 கற்றில னாயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை.

415 இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.

416 எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

417 பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.

418 கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.

419 நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராதல் அரிது.

420 செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்.

411 Es gibt unter allen Gütern kein höheres Gut, als den Weisen zu lauschen

412 Hat das Ohr keine Nahrung,* bekommt doch der Magen etwas zu essen.

413 Lauschen die Hörer wichtiger Weisung, ist das Ohr zufrieden und satt; wer zuhöret, gleichet den Göttern, die sich der Opfergaben erfreuen.

414 Niemand darf einen Unwissenden hindern zu hören; Stecken und Stab wird das Wissen ihm sein, wenn Ungemach ihn bedrängt.

415 Der Rechtschaffenen Worte sind wie ein Stecken, der Strauchelnde stützt auf morastigem Grund.

416 Guten Worten lausche voll Inbrunst, und seien 's nicht viel; auch wenige gute Worte verleihen dir Würde*.

417 Wer zuhört und sich dadurch Wissen erwirbt und darüber sinnt, was er an weisen Worten gehört, redet nicht Unsinn, auch wenn er irrt.

418 Das Ohr, kann es hören, ist dennoch mit Taubheit geschlagen, wenn es sich an treffender Rede der Weisen nicht schult.

419 Wer sich den Worten der Weisen verschließt, wird schwerlich feinsinnig reden.

420 Ob sie gleich lebten oder auch stürben, was kümmert 's, schmeckt es dem Munde, dem Ohr aber nicht!

## 43 அறிவுடைமை

421 அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண்.

422 சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு.

423 எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

424 எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

425 உலகம் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு.

426 எவ்வ துறைவது உலகம் உலகத்தோடு
அவ்வ துறைவது அறிவு.

427 அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.

428 அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.

429 எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்.

430 அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.

## 43 Weisheit*

421 Weisheit ist eine Rüstung, die vor dem Untergang schützt; sie ist eine innere Festung, die selbst der Feind nicht zu stürmen vermag.

422 Weisheit läßt die Sinne nicht schweifen, wie 's ihnen beliebt, auf daß sie vom Bösen lassen und dem sich ergeben, was gut.

423 Weisheit ist, das Wahre vom Falschen zu scheiden, wer immer es sagt.

424 Der Weise spricht, daß ihn alle verstehen; immer versteht er der anderen Wort.

425 Den Weisen liebt alle Welt, besitzt er ein ausgeglichenes Wesen und übertreibt nicht zur einen und anderen Seit'.

426 Sich dem Laufe der Welt zu ergeben ist wahrhaftig weise.

427 Die Weisen wissen, was Künftiges kommt; der Tor aber schaut nicht voraus.

428 Töricht ist es, Gefahr nicht zu fürchten; was aber zu fürchten ist, fürchten die Weisen.

429 Die Weisen wissen, was Künftiges kommt und wappnen sich bald; selbst furchtbarstes Unglück erschrecket sie nicht.

430 Alles besitzen die Weisen; die Toren, was immer sie auch erwarben, besitzen doch nichts.

## 44 குற்றங்கடிதல்

431 செருக்குஞ் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

432 இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு.

433 தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

434 குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை.

435 வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

436 தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்பிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு.

437 செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும்.

438 பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று.

439 வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

440 காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்.

## 44 Fehler vermeiden

431 Die Größe derer ist über alles erhaben, die frei sind von Niedertracht, Hochmut und Zorn.*

432 Eines Herrschers Fehler sind Hochmut, gemeines Vergnügen und Geiz.

433 Ein Fehler mag sein wie ein Hirsekorn klein; so groß wie ein Baum* ist er dem, der fürchtet die Schuld.

434 Hüte dich davor, Falsches zu tun; Fehler sind übermächtige Feinde und stürzen dich ins Verderben.

435 Vor künftigem Unheil schütze dich bald; du wirst sonst gewißlich zerstöret wie Stroh, das im Feuer zu Asche verbrennt.

436 Erkenne die eigenen Fehler und lege sie ab; der anderen Schwächen richte erst dann. Welch Übel vermag dich dann noch zu treffen?

437 Der Geizhals, der auf dem Gelde hockt und nicht gibt, verliert es gewiß.

438 Des Geizhalses Habgier ist unter allen Lastern das schlimmste.

439 Erhebe dich niemals über die andern; laß fahren dahin, was nichts Gutes erbringt.

440 Vergeblich sind alle schmählichen Ränke des Feinds, folgst du deinen Zielen besonnen und planest geheim.

# ௪௫ பெரியாரைத் துணைக்கோடல்

441 அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

442 உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

443 அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

444 தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

445 சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

446 தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

447 இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

448 இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

449 முதலிலார்க்கு ஊதியம் இல்லை மதலையாஞ்
சார்பிலார்க்கு இல்லை நிலை.

450 பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

## 45 Die Gunst der wahrhaft Großen erlangen

441 Achte sie hoch, die weise geworden und rechtschaffen sind, und trachte danach, ihrer Freundschaft würdig zu sein.

442 Pflege Freundschaft mit denen, die es vermögen, vor künftigem Unheil dich zu bewahren und auch von allen Übeln befreien.

443 Der Würdigen Zuneigung zu erlangen ist seltenste Segnung seltenen Guts.

444 Sind jene, die würdiger sind als du, deine Freunde geworden, gewinnest du Kraft, gegen die alle andere Stärke verblaßt.

445 Sei klug und wähle Minister sorgfältig aus; sie sind deine Augen.

446 Wer würdige Freunde hat, braucht nicht zu fürchten den grausamen Feind.

447 Wo ist der Feind, der Herrscher vernichtet, wenn Freunde er hat, die tadeln, so Falsches er tut?

448 Der Unbesonnene stürzt ins Verderben, wird er nicht von guten Freunden ermahnt; vernichtet zu werden, braucht er keine Feind'.

449 Wer ohne Vermögen, macht keinen Gewinn; starke Herrschaft ohne der Weisen helfende Hand hat keinen Bestand.

450 Töricht, wer viele Feinde sich schafft; zehnmal verwerflicher ist es, die Freundschaft der Guten* von sich zu weisen.

# 46 சிற்றினம் சேராமை

451 சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

452 நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு.

453 மனத்தானாம் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானாம்
இன்னான் எனப்படுஞ் சொல்.

454 மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகும் அறிவு.

455 மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

456 மனந்தூயார்க் கெச்சம்நன் றாகும் இனந்தூயார்க்கு
இல்லைநன் றாகா வினை.

457 மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும்.

458 மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப் புடைத்து.

459 மனநலத்தின் ஆகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தின் ஏமாப் புடைத்து.

460 நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல்.

## 46 Schlechter Umgang

451 Die Würdigen fürchten gemeine Gesellschaft; das Pack sucht den Pöbel, als ob 's seine eigen Familie wär'.

452 Das Wasser ist gut oder schlecht wie der Acker, den es durchfließt; der Mensch ist wie die Gesellschaft, mit der er verkehrt.

453 Was der Mensch wahrnimmt, hängt ab vom Verstand*, aber sein Ruf von der Gesellschaft, mit der er verkehrt.

454 Weisheit scheint im Verstande zu liegen; in Wahrheit ist ihr Zuhaus die Gesellschaft, mit der man verkehrt.

455 Reinheit des Herzens und Reinheit der Tat sind immer so lauter wie die Gesellschaft, mit der man verkehrt.

456 Wer reinen Herzens, erfreuet sich rechtschaffener Kinder; alles wird unter den Händen derer gedeihen, die sich guten Umgang erwählen.

457 Ein lauteres Herz ist den Lebenden kostbares Gut; gute Gesellschaft bringt ihnen Ruhm.

458 Die Weisen haben ein lauteres Herz; gute Gesellschaft der Weisen machet sie stark.

459 Lautere Herzen wählten das künftige Glück*; gute Gesellschaft machet sie stark.

460 Es gibt keinen größeren Beistand als gute Gesellschaft; nichts aber schaffet größeres Leid als Umgang mit Pack.

## 47 தெரிந்து செயல்வகை

461 அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.

462 தெரிந்த இனத்தோடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்.

463 ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.

464 தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பாடு அஞ்சு பவர்.

465 வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

466 செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.

467 எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.

468 ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

469 நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டு அவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

470 எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு.

## 47 Überlegen, bevor man handelt

461 Denke sorgfältig nach und wäge Einsatz, Verlust und Gewinn; erst dann sollst du handeln.

462 Wer zuverlässige Freunde befragt, überlegt und handelt danach, kann alles erreichen.

463 Die Weisen verlocket nicht zweifelhafter Gewinn; sie gehen ein Wagnis nicht ein, wenn 's ihnen Verlust des Vermögens beschert.

464 Wer Schmach und Schande fürchtet, gehet ein Wagnis nicht ein, hat er es nicht vorher gründlich bedacht.

465 Es ist, als ob der Feind wie die Saat auf bereitetem Acker gedeiht, wird vorher nicht gründlich alles* bedacht.

466 Wer tut, was nicht getan werden darf, fällt der Vernichtung anheim; wer es nicht wagt, was getan werden muß, geht gleichsam zugrund.

467 Denke erst nach, dann wage den Schritt; es erst zu wagen und dann zu sagen: "Wir werden es später bedenken!" birgt große Gefahr.

468 Wer sich nicht müht, sein Werk recht zu tun,* wird alles verlieren, auch wenn er große Hilfe erfährt.

469 Wer nicht das Wesen derer bedenkt, denen er Gutes erweist, handelt falsch.

470 Was immer du tust, gib niemandem Anlaß für Spott oder Tadel; die Welt duldet nicht, was* unwürdig ist.

## ௪௮ வலியறிதல்

471 வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.

472 ஒல்வ தறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல்.

473 உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.

474 அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

475 பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

476 நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்.

477 ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி.

478 ஆகாறு அளவிட்டி தாயினுங் கேடில்லை
போகாறு அகலாக் கடை.

479 அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்.

480 உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

## 48 Die Stärke beurteilen

471 Bedenke die Schwierigkeit des, was du willst, wäge die eigene Kraft, der Gegner und Bundesgenossen; dann handle.

472 Wer seine Fähigkeiten erkennt und was zu wissen ist, weiß, wer seine Stärke und Grenzen kennt, kann alles erreichen.

473 Viele vollendeten nicht, was sie einst begannen; in Abenteuer stürzten sie sich aus Selbstüberschätzung, und was sie auch taten, brach doch inmitten entzwei.

474 Wer Frieden nicht will und die Grenzen der Macht nicht erkennt, nimmt schnelles und schmähliches End'.

475 Die Achse des überladenen Wagens zerbricht, kommt auch nur eine Pfauenfeder hinzu.

476 Wer in die Spitze des Baumes steigt, muß elend verderben, will er noch höher hinaus.

477 Halte das rechte Maß, wenn du gibst; das ist der Weg, den Wohlstand zu wahren.

478 Ist der Zufluß auch eng, so ist es doch ohne Belang, solange der Abfluß nicht breiter ist als der Zufluß.*

479 Scheinen das Leben auch reich und der Wohlstand gar groß: Kennet der Mensch nicht rechtes Maß, so schwindet doch alles dahin.

480 Schnell muß der Wohlstand unter den Händen zerrinnen, wird er für nutzlose Dinge verpraßt.

# 49 காலம் அறிதல்

481 பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

482 பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு.

483 அருவினை என்ப உளவோ கருவியான்
காலம் அறிந்து செயின்.

484 ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்.

485 காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்.

486 ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

487 பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.

488 செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
காணின் கிழக்காம் தலை

489 எய்தற் கரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல்.

490 கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து.

## 49 Den rechten Augenblick erkennen

481 Die Krähe besiegt die Eule am Tage; den rechten Zeitpunkt nutzet der Herrscher, zu schlagen den Feind.

482 Zur rechten Zeit zu handeln ist eine Schnur; sie bindet den Herrscher fest an das Glück*.

483 Was vermag dem entgegenzustehen, der mit angemessenen Mitteln zur rechten Zeit handelt?

484 Wer handelt am richtigen Ort und zur günstigsten Stund', vermag sogar zu erobern die Welt.

485 Wer die Welt erobern will, harre geduldig auf günstigste Stund'.

486 Der gelassene Starke gleichet dem kämpfenden Widder; er macht einen Schritt erst zurück, und dann setzt er an zum vernichtenden Sprung.

487 Die Weisen zeigen nicht gleich ihren Zorn; sie nähren ihn heimlich und warten auf günstigste Stund'.

488 Beuge dich geduldig der Last eines übermächtigen Feinds; neigt seine Macht sich dem Ende, greife ihn an, und leichte Beute wird er dir sein.

489 Wenn wider Erwarten sich gute Gelegenheit naht, zaudere nicht und mache Unmögliches wahr.

490 Ist die Zeit gegen dich, täusche Friedfertigkeit vor; wie ein Reiher warte geduldig auf Beute, und schlage dann zu wie sein Schnabel so schnell.*

## 50 இடன் அறிதல்

491 தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்அல் லது

492 முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவந் தரும்.

493 ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்.

494 எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

495 நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.

496 கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடாநிலத்து.

497 அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின்.

498 சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்.

499 சிறைநலனும் சீரும் இலரெனினும் மாந்தர்
உறைநிலத்தோடு ஒட்டல் அரிது.

500 காலாழ் களரில் நரியடும் கண்ணஞ்சா
வேலாள் முகத்த களிறு.

## 50 Den rechten Ort wählen

491 Bevor du streitest, finde dafür den richtigen Ort; doch denke vom Feind nicht gering.

492 Die starke Festung ist größter Vorteil selbst dem mächtigen Starken.

493 Am richtigen Ort haben selbst die Schwachen Erfolg, wenn sie sich nicht überschätzen.

494 Die Pläne des Gegners werden durchkreuzt, erwartest du ihn am richtigen Ort.

495 Das Krokodil ist mächtig im tiefen Gewässer; an Land ist es nur ein Spielball des Feinds.

496 Das Schiff segelt nur auf dem Meer, an Land kommt es nicht von der Stell'; der Wagen* kann trotz seiner großen Räder auf Wasser nicht fahren.

497 Vorausschauend Denken und Wagemut verhelfen am richtigen Ort dem tapferen Manne zum Sieg.

498 Ist die Streitmacht auch schwach, am richtigen Ort kann sie den starken Gegner besiegen.

499 Ein Gegner mag schwach sein und ohne der Festung mächtigen Schutz: Ihn anzugreifen auf seinem eigenen Boden ist schwer.

500 Vor Lanzenträgern weichet kein mutiger Elefant; mit Zähnen wie Lanzen tötet' er sie, doch kann er nichts richten gegen den Fuchs auf morastigem Grund.

# 51 தெரிந்து தெளிதல்

501 அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

502 குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.

503 அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.

504 குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

505 பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

506 அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

507 காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாம் தரும்.

508 தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.

509 தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

510 தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.

## 51 Auswahl von Getreuen

501 Vier Prüfungen soll der Getreue bestehen: Finde heraus, ob er tugendhaft ist, Vermögen besitzt und Freude am Leben und ob er Furcht vor dem Tode verspürt.

502 Erwähle den Mann aus guter Familie als deinen Getreuen, ist frei er von Tadel und fürchtet er Schande und Schmach.

503 Selbst unter den Weisen mit seltenem Wissen und ohn' einen Makel ist schwerlich einer zu finden, der alles schon weiß.

504 Wäge Verdienste und Schwächen des Mannes; was überwiegt, nimm als seine Natur.*

505 Maßstab für großes und niedriges Wesen des Menschen sind seine Taten allein.

506 Vertraue nicht denen, die ohne Verwandte; sie sind ohne Halt und fürchten nicht Schande und Schmach.

507 Wer Vorlieben zeigt und Toren vertraut und sie als Berater erwählt, wird diesen Fehler schwer büßen.

508 Wer einem Fremden vertraut, hat er ihn nicht vorher geprüft, beschwöret Sorgen, die nimmermehr enden, aufs Haupt gar der Nachkommenschaft.

509 Niemandem traue, hast du ihn nicht vorher geprüft; wie er dir diene, entscheide erst dann.

510 Wer jemandem, ohne ihn vorher geprüft zu haben, vertraut und jenen mißtraut, die er vorher für würdig befand, ist Urheber endlosen Leids.

## 52 தெரிந்து வினையாடல்

511 நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.

512 வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை.

513 அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

514 எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர்.

515 அறிந்தாற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்
சிறந்தானென்று ஏவற்பாற் றன்று.

516 செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்து செயல்.

517 இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்.

518 வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல்.

519 வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்கும் திரு.

520 நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

## 52 Übertragung von Aufgaben

511 Wer zwischen Gut und Böse kann scheiden und Gutes erwählt, der trete in deinen Dienst.

512 Wer Quellen des Reichtums erschließt, des Landes Wohlstand mehret und Unheil abwehrt, der trete in deinen Dienst.

513 Wer ohne Habgier, voll redlicher Lieb', wer klaren Verstand und Weitblick besitzt, wer also diese vier Tugenden hat, der trete in deinen Dienst.

514 Viele werden für gut befunden, doch ändern sie sich im Laufe der Zeit und kommen dann ihren Pflichten nicht nach.

515 In deine Dienste stelle Getreue, die klug sind und fähig und gut, doch laß die persönliche Neigung beiseit.

516 Hast du den fähigen Mann erwählt, laß ihn das Werk beginnen zur richtigen Zeit.

517 Finde heraus, wer fähig ist, die Arbeit zu tun; in seiner Verantwortung werd' sie ihm dann übertragen.

518 Hast du den fähigen Mann erwählt, versetze ihn auch in die Lage, eigenverantwortlich die Arbeit zu tun.

519 Wer dem Manne mißtraut, der sein Bestes gibt, den wird das Glück* schnell verlassen.

520 Der Herrscher wache alle Zeit über sie, die ihm sind ergeben; sind sie getreu, gedeihet das Land.

# 53 சுற்றந் தழால்

521 பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

522 விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்.

523 அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

524 சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன்.

525 கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப் படும்.

526 பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத்து இல்.

527 காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள.

528 பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.

529 தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வரும்.

530 உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந்து எண்ணிக் கொளல்.

## 79 நட்பு

781 செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

782 நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு.

783 நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

784 நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு.

785 புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.

786 முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு.

787 அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு.

788 உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

789 நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.

790 இனையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு.

## 79 Freundschaft

781 Was in der Welt ist schwerer, als Freundschaft zu schließen; welch andere Rüstung kommet ihr gleich als Waffe gegen den Feind?

782 Wie zunehmend Mond ist Freundschaft mit würdigen Männern; Gemeinschaft mit Toren ist wie der abnehmend Mond.

783 Freundschaft mit Würdigen gleichet dem Lesen bedeutender Bücher; je mehr man sich in sie vertieft, desto mehr erliegt man ihrem bestrickenden Bann.

784 Fröhlich zu machen ist nicht das Ziel einer Freundschaft; sie hält im Zaume und tadelt ihn streng, der abkommt vom Wege der Rechtschaffenheit.

785 Freundschaft braucht weder ständiges Treffen noch ein gemeinsames Haus; nur Eintracht der Herzen machet sie stark.

786 Freundschaft ist mehr als ein Lächeln im Antlitz; Freundschaft erstrahlet als Freude tief in der Seele.

787 Freundschaft beschützt vor Gefahr und Verderben; auf rechten Weg geleitet sie und teilt alles Leid.

788 Freundschaft bedeutet, eilends im Unglück zu Hilfe zu eilen; sie gleicht einer Hand, die rasch das Gewand greift, bevor es die Blöße entdeckt.

789 Freundschaft hat dort ihren Thron, wo sie dem anderen hilft und Herzen im Gleichklange schlagen.

790 Freundschaft ist dumpfe Gemeinheit, wenn sie nur spricht: "So sehr lieb' ich dich, wie sehr du mich liebst."

# 80 நட்பாராய்தல்

791 நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

792 ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரம் தரும்.

793 குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு.

794 குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு.

795 அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்.

796 கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்.

797 ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல்.

798 உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு.

799 கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும்.

800 மருவுக மாசற்றார் கேண்மைஒன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு.

791 Nichts ist verwerflicher, als allzuschnell Freundschaft zu schließen; denn sie ist schwerlich zu lösen.

792 Wer leichtfertig allzuschnell Freundschaften schließt, beschwöret Unheil herauf, das erst mit dem Tode ihn läßt.

793 Ergründe das Wesen, die Herkunft und Laster, seine Verwandten und andern Umgang; ist er es wert, so nimm ihn zum Freund.

794 Um jeden Preis suche den als Freund zu gewinnen, der gutem Hause entstammt und fürchtet die Schmach.

795 Wahre Freunde weisen auf deine Laster, auf daß du sie bitter beweinst, wann immer du abkommst vom Wege der Rechtschaffenheit.

796 Das Unglück, schlägt es mit der Gerte, ist dennoch ein Segen; mit ihr ist zu messen, wie tief oder seicht Freundschaft ist.

797 Freundschaft mit Toren zu lösen bringt großen Gewinn.

798 Was später bedauern könntest, laß sein; erwähle nicht Freunde, die dich verlassen in Stunden der Not.

799 Im Angesichte des Todes gar sitzet der Stachel tief bei dem Gedanken an Freunde, die Treue gebrochen in Stunden der Not.

800 Pflege die Freundschaft mit denen, die frei sind von Tadel; wenn es so sein muß, kaufe dich frei vom Umgang mit elendem Pack.

## 81 பழைமை

801 பழைமை எனப்படுவது யாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

802 நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
உப்பாதல் சான்றோர் கடன்.

803 பழகிய நட்பெவன் செய்யும் கெழுதகைமை
செய்தாங்கு அமையாக் கடை.

804 விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

805 பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

806 எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.

807 அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

808 கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின்.

809 கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு.

810 விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார்.

801 Liebenden Umgang mit'nander zu pflegen ist innige Freundschaft; willig räumt sie dem Freunde notwendige Freiheiten* ein.

802 Dem Freunde willig Freiheit zu lassen ist Wesen der Freundschaft; die Würdigen selber verübeln es nicht.

803 Was nützet langwährende Freundschaft, räumt sie dem Freunde nicht Freiheiten ein?

804 Was immer der Freund ohn' dein Wissen getan, nimm es, als habest du 's selber gewollt.

805 Hat der Freund dich im Herzen verletzt, so laste es ihm doch nicht an; führe den Schmerz auf sein Unwissen zurück oder die Liebe zu dir.

806 Ein Freund gibt den Freund seines Herzens nicht preis, ist auch durch dessen Verschulden das Ende bestimmt.

807 Wer lange aus tiefstem Herzen geliebt, läßt nicht von der Liebe zum Freund, naht auch durch dessen Verschulden das End'.

808 Ein Freund hört nicht zu, reden Klatschmäuler schlecht von dem Freund; tut er dir weh, ist nicht der Freund schlecht, sondern der Tag.*

809 Alle Welt möchte allein mit ihm teilen, der von der Liebe zum Freunde nicht läßt.

810 Selbst Feinde werden ihm freundlich begegnen, der von langwährender Liebe zum Freunde nicht läßt.

# 82 தீ நட்பு

811 பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது.

812 உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்.

813 உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்.

814 அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை.

815 செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று.

816 பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி உறும்.

817 நகைவகைய ராகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி உறும்.

818 ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

819 கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

820 எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு.

## 82 Verwerfliche Freundschaft

811 Schlechte Menschen reden von Liebe, doch lieben sie nicht; es wäre besser, es stürb' solche Liebe sogleich.

812 Was nützt es, gewinnest du Freundschaft von Schuften, was nützt es, verlierest du sie? Sie kriechen und schmeicheln, solang sie dich brauchen und geben dich hinterher auf.

813 Die Falschen berechnen Gewinn einer Freundschaft in Geld; vom gleichen Schlage sind Diebesgesindel und elende Huren.

814 Ein unzuverlässiges Pferd wirft den Reiter ab in der Schlacht; weit besser ist es, einsam zu sein, als solche Freunde zu haben.

815 Verzichte getrost auf die Freundschaft des Niedriggesinnten, der dein Vertrauen mißbraucht in Zeiten der Not.

816 Zehnmillionenmal besser ist Haß aller Weisen als der vertrauliche Umgang mit Toren.

817 Einhundertmillionenmal besser ist offener Feind als lustige Zechgenossen und Schmeichler.

818 Wer Hindernisse auf deinem Wege auftürmt, ist der Freundschaft nicht wert; sage kein Wort, doch gib solche Freunde Schritt für Schritt auf.

819 Wenn Taten des Freundes die Worte Lügen strafen, ruft selbst im Traum seine Freundschaft Unheil herbei.

820 Meide den Schwindler, der in der Kammer dir süße Worte ins Ohr sagt und draußen dich schmäht.

# 83 கூடா நட்பு

821 சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

822 இனம்போன்று இனமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல் வேறு படும்.

823 பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது.

824 முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும்.

825 மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறற்பாற்று அன்று.

826 நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும்.

827 சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்.

828 தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து.

829 மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று.

830 பகைநட்பாம் காலம் வருங்கால் முகநட்டு
அகநட்பு ஒரீஇ விடல்.

## 83 Geheuchelte Freundschaft

821 Geheuchelte Freundschaft des Feindes ist nur der Amboß, auf dem er dich schlägt, sobald sich Gelegenheit bietet.

822 Ohne Liebe im Herzen heuchelt Freundschaft der Feind; seine Zuneigung schwankt wie die Launen der Frau.

823 Haben sie auch großes Wissen erworben, Feinde geben den Haß im Herzen nie auf.

824 Vor scheinheiligen Heuchlern schrecke zurück; sie lächeln dir zu, doch nähren sie heimlichen Haß.

825 Falsche Freunde können nicht lieben; ihren Worten schenke nicht Glauben, auch wenn sie dir schmeicheln.

826 Mögen sie sprechen wie liebste Freunde so zart, Worte von Feinden werden gar bald offenbar.

827 Die Krümmung des Bogens verheißet Unheil; glaub nicht den Worten von Feinden, auch wenn sie sich krümmen und schmeicheln.

828 Zum Friedensgruße gefaltete Hände eines Verräters halten die tödliche Waffe versteckt; glaub nicht den Tränen der Feinde, ihr Schluchzen birgt große Gefahr.

829 Lächle und täusche Freundschaft in liebevoller Umarmung nur vor; zermalme Verräter, die dich im geheimen verachten, doch öffentlich rühmen.

830 Geben die Feinde vor, sich als Freunde zu nahen, trage ein freundliches Lächeln zur Schau; in Wahrheit aber banne sie aus dem Herzen.

## ௮௪ பேதைமை

831 பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்கொண்டு
ஊதியம் போக விடல்.

832 பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

833 நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

834 ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையின் பேதையார் இல்.

835 ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு.

836 பொய்படும் ஒன்றே புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

837 ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை.

838 மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின்.

839 பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன்று இல்.

840 கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

## 84 Torheit

831 Sag, was ist Torheit? Sie ist das Verharren an dem, was nur schadet, und wegzuwerfen, was bringet Gewinn.

832 Der Torheiten größte ist, daran zu hangen, was unwürdig ist und gemein.

833 Ein Tor ist schamlos und roh in seinem Verhalten, gleichgültig ist er, gefühllos und achtet nichts hoch.

834 Es gibt keinen größeren Toren als den, der lernt, versteht und andere lehrt, was er weiß, doch Sklave der Leidenschaft bleibt.

835 In seinem kurzen Leben auf Erden begeht der Tor viel Gemeines; im voraus erkauft er sich einen Platz im siebenfachen Abgrund der Hölle*.

836 Ein elender Tor kommt doch nicht ans Ziel, was er auch beginnt; in der Gefangenschaft Fesseln ist er verstrickt.

837 Kommt ein Tor zu Vermögen, laben sich falsche Freunde daran, während die Seinen verhungern.

838 Kommen Toren zu Wohlstand, benehmen sie sich wie betrunkene Narren.

839 Freundschaft mit Toren ist wahrhaftig süß: Du fühlst keinen Schmerz, verlassen sie dich.

840 Sind Toren zugegen in einer Versammlung der Weisen, ist es, als ging' man mit schmutzigen Füßen zu Bett.

## 85 புல்லறிவாண்மை

841 அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை
இன்மையா வையாது உலகு.

842 அறிவிலான் நெஞ்சுவந்து ஈதல் பிறிதுயாதும்
இல்லை பெறுவான் தவம்.

843 அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது.

844 வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு.

845 கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடற
வல்லதூஉம் ஐயம் தரும்.

846 அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி.

847 அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

848 ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய்.

849 காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு.

850 உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்.

## 85 Dummheit

841 Wahrhaftige Armut ist geistige Armut; andere Armut gibt ’s nicht für die Welt.

842 Das Geschenk eines Toren ist für den Beschenkten nichts weiter als das, was er sich durch seine Taten verdient’.

843 Die Pein, die ein Dummkopf aus eigen Verschulden erleidet, übersteiget bei weitem den Schmerz durch den Feind.

844 Sag, was ist Dummheit? Dummheit ist Wahn, sich selber zu sagen, wie weise man sei.

845 Wer vorgibt zu wissen und dennoch nichts weiß, weckt Zweifel an dem, was er weiß.

846 Dummköpfe können nur ihre Blöße bedecken, doch eigene Fehler verbergen sie nicht.

847 Der Tor, der heilige Weisung* der Weisen verlacht, bringt großes Unheil über sein Haupt.

848 Bis an seines Lebens Ende ist er allen andern der Heimsuchung schlimmste, der guten Rat nicht befolgt und selber nicht weiß, was ist recht.

849 Wer versucht, einen Toren das Sehen zu lehren, ist selber ein Narr; der Tor sieht nur das, was er vorher auch sah.*

850 Wer verneint, was alle Welt bejaht*, ist wie ein verrufener Geist, der auf der Erde sein Unwesen treibt.

## 86 இகல்

851 இகலென்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய்.

852 பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை.

853 இகலென்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத்
தாவில் விளக்கம் தரும்.

854 இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.

855 இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்கும் தன்மை யவர்.

856 இகலின் மிகலினிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து.

857 மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர்.

858 இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகலூக்கின் ஊக்குமாம் கேடு.

859 இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு.

860 இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு.

## 86 Feindschaft

851 Feindschaft ist eine Seuche, die in den Menschen Zwietracht erzeugt.

852 Suchen auch andere Zwietracht und Streit, so wolle nicht Gleiches mit Gleichem vergelten und nicht über Rache nachsinnen.

853 Feindschaft ist ein verwerfliches Übel; wer sie vertreibt, erlangt immerwährenden Ruhm.*

854 Feindschaft ist übelstes unter verwerflichen Übeln; mit Stumpf und Stiel reiß sie aus dem Herzen, so wird dir die Freude der Freuden zuteil.

855 Wer vermag, den friedlichen Mann zu besiegen, der Feindschaft in seinem Herzen nicht nährt?

856 Es dauert nicht lang, bevor er strauchelt und fällt*, der Freude empfindet, Feindschaft zu säen.

857 Dem bleibet die höchste Wahrheit verschlossen, der sich gehässig dem Hader ergibt und andere mit seiner Feindschaft verletzt.

858 Ersticke die Feindschaft im Keime, so geht es dir wohl; wer sie aber nährt, läuft dem Untergang in die Arme.

859 Wem 's gut geht, dem ist es auch leicht, die Zwietracht zu meiden; wem 's schlecht geht, der läuft dem Haß hinterher.

860 Dem Haß entspringt alles bittere Böse; friedliebendem Wesen entsteiget die Pracht von Eintracht und Frieden.

## 87 பகை மாட்சி

861 வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை.

862 அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு.

863 அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு.

864 நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது.

865 வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது.

866 காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

867 கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.

868 குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு
இனனிலனாம் ஏமாப்பு உடைத்து.

869 செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின்.

870 கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லாது ஒளி.

## 87 Das Wesen der Feinde

861 Kämpfe nicht mit überlegenem Feind; gegen die schwachen Gegner erhebe gewaltig die Faust, wagen sie es, dich zu reizen.

862 Wie kann er erfolgreich den Feinden begegnen, der grausam knechtet die Seinen, der keine Verbündeten hat und zu schwach ist, dem Gegner zu trotzen?

863 Wer feige, geizig, dumm und kriegslüstern ist, der ist leichte Beute dem Feind.

864 Wer launisch ist und seine Zung' nicht beherrscht, ist immer und überall leichte Beute dem Feind.

865 Wer gegen das Recht verstößt und niedrigen Wesens, wer Tadel verachtet und nicht der Kunst der Staatsführung folgt, bereitet nur Freude dem Feind.

866 Wer blind ist vor Zorn und Sklave der Lust, bereitet dem Gegner nur Freud'.

867 Des Feindschaft, der alles verdirbt, was erfolgreich begann, sollte man suchen und dafür zahlen auch jeden erdenklichen Preis.

868 Die Feinde frohlocken über den Herrscher mit vielen Fehlern und Lastern; Verbündete nennt er nicht sein.

869 Die Gegner frohlocken; sie haben den Sieg schon errungen über den feigen und törichten Feind.

870 Wer sich den törichten Feind als leichte Beute nicht nimmt, wirft Ruhm und Ehren für immer leichtfertig fort.

## 88 பகைத்திறம் தெரிதல்

871 பகைஎன்னும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற்று அன்று.

872 வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

873 ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

874 பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு.

875 தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்
இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று.

876 தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல்.

877 நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

878 வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு.

879 இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து.

880 உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

## 88 Erkennen von Feindschaft

871 Verwünschte Gesinnung, Feindschaft genannt, darf niemals beschworen werden auch nur im Scherz.

872 Forderst du auch die Bogenschützen heraus, hüte dich vor der Feindschaft der Männer des Worts*; Feder und Tinte sind stärkere Waffe noch als das Schwert.

873 Wer keine Verbündeten hat, doch den Haß vieler Gegner erweckt, richtet Schlimmeres an als Geisteskranke in ihrem Wahn.

874 Die Macht des Herrschers wird nimmer vergehen, der Feinde in Freunde zu wandeln vermag.

875 Wer ohne Verbündete gegen zwei Feinde gleichzeitig kämpft, versuche, einen von ihnen als Freund zu gewinnen.

876 In Zeiten der Not schenke niemandem Glauben, ob du ihm trauen kannst oder auch nicht; suche nicht Freund oder Feind dir zu machen in großer Gefahr.*

877 Sprich niemals von Sorgen, die sie nicht erraten; Feinden gib deine Schwächen nicht preis.

878 Wer die Lage durchschaut hat und weiß, was zu tun, wer Vorsorge für die Verteidigung trifft, schlägt bald schon den Hochmut der Feinde zu Staub.

879 Reiße die Dornensträucher heraus, solange sie jung; sind sie erst groß, wird die Hand, die sie ausreißt, blutiggestochen*.

880 Sie werden durch einen Hauch schon vom Tode geschlagen, die elenden Hochmut derer nicht brechen, die ihnen trotzen.

## 89 உட்பகை

881 நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின்.

882 வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

883 உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

884 மனமாணா உட்பகை தோன்றின் இனமாணா
ஏதம் பலவுந் தரும்.

885 உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்
ஏதம் பலவுந் தரும்.

886 ஒன்றாமை ஒன்றியார் கட்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது.

887 செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி.

888 அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி.

889 எட்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு.

890 உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடனுறைந் தற்று.

## 89 Verräter in eigenen Reihen

881 Selbst Haine und schmutzige Brunnen sind nicht erquickend, brütet in ihnen gefährlicher Keim; so bringen verräterische Verwandte nur großes Verderben.

882 Gleicht auch der offene Feind blankem Schwert, so fürchte ihn nicht; hüte dich aber vor denen, die Freundschaft dir heucheln.*

883 Sei wachsam vor dem, der Haß dir verbirgt; in Zeiten großer Gefahr zerschneidet er dich wie des Töpfers Messer den Ton.

884 Wer sich ausgibt als Freund, doch feindlich gesinnt, ruft Unheil herbei; seinen tückischen Einflüsterungen erliegen sogar die Getreuen.

885 Ein Verräter, von heimlicher Feindschaft getrieben, ruft großes Unheil herbei; er trachtet dir nach dem Leben.

886 Wenn deine Getreuen die Untreue leitet, kannst du dem Tode schwerlich entgehen.

887 Topf* und Deckel scheinen ein Ding, und doch sind sie zwei; so ist auch ein Haus mit Verrätern, von heimlichem Haß heimgesucht, wenn sie auch einig scheinen mit dir.

888 Das Haus mit Verrätern, von heimlichem Haß heimgesucht, verliert seine Stärke, als ob eine emsige Feile das Eisen feilet zu Staub.

889 Mag er auch erst so klein wie ein Sesamkorn sein, es lauert den Untergang im Haus mit Verrätern.

890 Mit jenen zusammenzuleben, die Liebe dir heucheln, doch bitterlich hassen, ist wie vertraulicher Umgang mit einer gefährlichen Schlange im Haus.

# 90 பெரியாரைப் பிழையாமை

891 ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாம் தலை.

892 பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும்.

893 கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு.

894 கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல்.

896 எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

897 வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்
தகைமாண்ட தக்கார் செறின்.

898 குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

899 ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

900 இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

## 90 Beleidigungen gegen die Großen*

891 Laß Vorsicht walten und setze die eigene Sicherheit nicht aufs Spiel; mißachte nicht den Willen derer, die alles vollbringen.

892 Wer die Großen geringschätzt, erweckt ihren Zorn; und immerwährendes Unheil beschwört er herauf.

893 Willst du dich selber zerstören, so stelle dich taub gutem Rat; beleidige jene, die dich, wenn sie wollen, blindlings vernichten.

894 Wenn Schwache die Mächtigen kränken, laden sie gleichsam den Tod zu üppigem Mahl.

895 Wohin er auch geht, der Tod holt ihn ein; sterben muß, wer den Zorn der Mächtigen weckt.

896 In Feuersbrunst mag man dem Tode entkommen; wer Mächtige kränkt, hat sein Leben verwirkt.

897 Wo bleiben der Reichtum des Landes, militärische Macht und alle Schätze der Welt, ergrimmen die Weisen im Zorn?

898 Wenn sie, die so groß sind wie hohes Gebirge, es wollen, werden die Herrscher und ihre Getreuen zerstört, mögen die Fürsten auch glauben, die Herrschaft hab' ewig Bestand.

899 Selbst Indra*, der König der himmlischen Mächte, stürzet vom Thron, wenn strenge Asketen ihm zürnen.

900 Erführen sie alle Hilfe der Welt, werden selbst Könige nimmer errettet von Untergang und sicherem Tod, wenn strenge Asketen im Zorn gegen sie sind ergrimmt.

# 91 பெண்வழிச் சேறல்

901 மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது.

902 பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

903 இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.

904 மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று.

905 இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

906 இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்
அமையார்தோள் அஞ்சு பவர்.

907 பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்
பெண்ணே பெருமை உடைத்து

908 நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர்.

909 அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ஏவல் செய்வார்கண் இல்.

910 எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல்.

## 91 Unterwerfung vor der Herrschaft der Frauen

901 Wer sich dem Willen der Frauen beugt, erlanget niemals Gewinn; wer sein Leben höheren Zielen* geweiht hat, verabscheut die Herrschaft der Frauen.

902 Wer einer Frau hörig, bringt sich und den andern nur Schmach; trotz seines Wohlstands muß er sein Antlitz verhüllen vor Scham.

903 Der Schwächling, der sich dem Willen der Frau unterwirft, demütigt sich tief; er darf es nicht wagen, den Blick zu erheben im Kreise der Edlen.

904 Die Seele des Schwächlings, der vor der Frau zittert, wird nicht erlöst; was er auch Großes vollbracht haben mag, er verliert seine Ehren und läuft dem Ruhm hinterher.

905 Wer vor der Frau zittert in elender Furcht, hat auch nicht den Mut, den Würdigen Gutes zu tun.

906 Erleben sie auch wie die Götter in zärtlichen Armen der Frauen himmlische Wonnen, es muß sie doch jeder verachten, die vor den Frauen erzittern vor Furcht.

907 Die Frau, die scheu ihre Blicke senkt, hat größere Würde als er, der sich der Herrschaft der Röcke hingibt.

908 Wer sich dem Willen der Frau unterwirft, kann seinen Freunden nimmermehr helfen, und niemals kann er Gutes mehr tun*.

909 Wer sich der Herrschaft der Röcke beugt, sperrt Gutes und wachsenden Wohlstand nur aus; nichts kann es in seinem Leben noch geben, an dem er sich freut*.

910 Männer, vom Glücke geliebt und mit Großem im Sinn, liefern sich niemals der Torheit aus, sich dem Willen der Frauen zu beugen.

# 92 வரைவின் மகளிர்

911 அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும்.

912 பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல்.

913 பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று.

914 பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர்.

915 பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர்.

916 தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்

917 நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

918 ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

919 வரைவிலா மாணிழையார் மென்தோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு.

920 இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

## 92 Huren

911 Huren, mit kostbarem Schmucke behängt, können nicht lieben, doch sie begehren die Männer für Geld; die süßen Worte der käuflichen Frauen richten zugrund.

912 Huren heucheln die Liebe und denken dabei nur an Geld; wäge den Wert solcher Frauen und such sie nicht auf.

913 Huren heucheln die Liebe; sie lieben, als ob sie in finsterem Raum eines Fremden Leichnam umarmen.

914 Wer reinen Herzens, besudelt sich nicht; er meidet die Huren, für die nur Geld zählt.

915 Wer Weisheit hat und Verstand, sucht niemals gemeines Vergnügen im Bett der von jedem käuflichen Frau.

916 Die Weisen wissen, was gut für sie ist; sie meiden die Huren, berühren sie nicht, die ihre zur Schau gestellten Reize verkaufen.

917 Leichtsinnige suchen Vergnügen bei Huren; Huren geben den Körper zwar hin, aber ihr Herz weilt woanders.

918 Die Arme der Huren verhexen nur Toren; Huren treiben den törichten Mann ins Verderben, der ihren Reizen verfällt.

919 Kostbare Steine schmücken die Arme der käuflichen Frau; Huren sind finsterster Abgrund der Hölle, und Toren stürzen sich selber hinab.

920 Huren, Glücksspiel und Alkohol sind die Vergnügen der Männer, welche das Glück* mit Verachtung bestraft.*

## 93 கள்ளுண்ணாமை

921 உட்கப்படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்.

922 உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்.

923 ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

924 நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

925 கையறி யாமை யுடைத்தே பொருள் கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

926 துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

927 உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

928 களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.

929 களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

930 கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.

## 93 Alkohol*

921 Wer der Trunksucht verfallen, den fürchtet kein Feind; der Ruhm eines Trunkenbolds schwindet dahin.

922 Enthalte dich des berauschenden Tranks; wer nichts darauf gibt, ob die Weisen ihn achten, mag sich betrinken.

923 Beim Anblick des trunkenen Sohnes fühlt eine Mutter nur Schmerz. Was werden beim Anblick des Trunkenboldes die Weisen empfinden?

924 Alkohol trinken ist Laster fürwahr; Schamgefühl selber, die liebliche Schöne, wendet verächtlich vom Trinker sich ab.

925 Geld auszugeben, um sich zu besaufen bis zur Bewußtlosigkeit, ist elender Schwachsinn.*

926 Wer Alkohol trinkt, ist wie jemand, der Gift zu sich nimmt; schlafende Trinker gleichen den Toten.

927 Mit sinnlosem Lallen und triefenden Augen verbringen die heimlichen Säufer betäubt ihren Tag; von ihren Freunden werden sie bald schon verlacht.

928 Ein Trunkenbold gebe nicht vor, er wisse nicht, was Trunkenheit sei; ist er betrunken, verrät er sich schnell.

929 Wer einen Säufer Vernunft lehren will, kann gleichsam mit einer Lampe im Wasser einen Ertrunkenen* suchen.

930 Ein Trinker, der nüchtern und hört, wie ein anderer Trunkenbold lallt, sieht gleichsam in einen Spiegel und klagt: "So also siehest du aus."*

## ௯௪ சூது

931 வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

932 ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.

933 உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

934 சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன்று இல்.

935 கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார்.

936 அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்
முகடியால் மூடப்பட் டார்.

937 பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

938 பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து
அல்லல் உழப்பிக்கும் சூது.

939 உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்.

940 இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று உயிர்.

## 94 Glücksspiel

931 Suche nicht Zuflucht im Spiel, auch wenn du gewinnst. Was denn vermag ein Fisch zu gewinnen, wenn er den Köder samt Haken verschluckt?

932 Bevor der Spieler nur einmal gewinnt, muß hundertfach er verlieren. Was kann ein Spieler im Leben gewinnen als hundertfachen Verlust?

933 Der Spieler verliert sein Vermögen an Fremde, wenn er dem Würfelspiel frönt.

934 Glücksspiel ruft alles Elend herbei und zerstöret den Ruf; nichts treibt einen Spieler schneller in Arme der Armut als sein verwerfliches Spiel.

935 Viele, die stolz auf ihr Würfelspiel waren und in Spielhöllen zu Haus, wurden vom Untergang eingeholt; nicht einer entkam seinem Griff.

936 Das Glücksspiel kommt als Unglück verheißender Geist* in Gestalt einer Sucht; wer ihr erst verfallen, hat Hunger und alles andere Unheil bestellt.

937 Wer seine Zeit in Glücksspielhäusern verbringt, verschleudert sein Erbe, beschmutzt seinen Ruf.

938 Spieler verlieren Vermögen und Ruf; das Glücksspiel verhärtet die Herzen und stürzt sie ins Elend hinab.

939 Ruhm, Wohlstand und Wissen gehen dem Spieler abhanden; betteln wird er um Nahrung und Kleidung.

940 Spielleidenschaft wird zur Sucht mit jedem Verlust; sie gleichet dem heftiger werdenden Flehen der Seele nach Leben, je tiefer das Leid.

# 95 மருந்து

941 மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று.

942 மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்

943 அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு.

944 அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

945 மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு.

946 இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய்.

947 தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்.

948 நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்

949 உற்றான் அளவும் பிணியளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்.

950 உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செலவானென்று
அப்பால்நாற் கூற்றே மருந்து.

## 95 Arznei*

941 Heilkundige Schriften der Weisen zählen drei Leiden*, deren das erste das windige ist; wer übertreibt in die eine und andere Richtung*, wird krank.

942 Ist alles verdaut, erst dann sollst du essen; so brauchst du keine Arznei.

943 Ist alles verdaut, erst dann sollst du essen, doch iß nicht zuviel; so währet dein Leben auf Erden noch lang.

944 Nur das sollst du essen, was dir auch bekommt,* doch iß nicht zuviel; warte, bis das, was du vorher gegessen, verdaut ist und Hunger aufkommt.

945 Ißt du nur das, was dir auch bekommt,* so wirst du nicht krank.

946 Wer maßvoll ißt, wenn der Darm ist geleert, der bleibet gesund; wer maßlos das Essen verschlinget, wird krank.

947 Wer ohne Rücksicht auf seine innere Hitze* das Essen verschlingt, wird schwer krank.

948 Erst werden die Krankheit und Ursach' und heilende Mittel erkannt; dann werde die Krankheit bekämpft.

949 Der Arzt soll die Größe des Kranken bedenken, die Schwere der Krankheit erkennen und ernsthaftig sinnen über die Zeit;* dann soll er den Kranken behandeln.

950 Viere sind nötig für eine erfolgreiche Heilung des Kranken: Es sind dies der Kranke, der Arzt, die heilenden Mittel und richtige Pfleg'; und diese sind wiederum jeweils vierfacher Art.*

## 96 குடிமை

951 இற்பிறந்தார் கண்அல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு.

952 ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.

953 நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு.

954 அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்.

955 வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பில் தலைப்பிரிதல் இன்று.

956 சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்தும்என் பார்.

957 குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து

958 நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்.

959 நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்.

960 நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு.

# 96 Edle Herkunft

951 Aufrichtigkeit und Furcht vor der Schande sind von Natur die Eigenschaften derer aus vornehmem Haus.

952 Drei Tugenden, von denen der wirkliche Adel nicht läßt, sind gutes Verhalten, Liebe zur Wahrheit und Furcht vor Schande und Schmach.

953 Vier Merkmale zeichnen den wirklichen Adel: Ein feines Lächeln trägt er im Antlitz, freigiebig ist er, spricht niemals ehrlose Worte und weiß, was Anstand bedeutet.

954 Wer von edler Geburt ist, beschmutzet nicht der Familie Ruf, und böte man ihm auch Millionen dafür.

955 Wer altem und vornehmem Hause entstammt, gibt nie seine Freigiebigkeit preis, ward auch das Vermögen gering im Laufe der Zeit.

956 Wer die Familienehre bewahrt, nimmt niemals Zuflucht zu Lug und Betrug; in seinem Herzen wohnet nicht heimliche Tücke.

957 Wie dunkle Flecken im Antlitz des Mondes werden die Fehler und Laster derer aus vornehmem Haus offenbar.

958 Edle Herkunft wird bald schon bezweifelt, hat sie des Pöbels sprachliche Art.

959 Die Güte des Ackers mißt man an wachsender Saat; vornehmes Wesen wird an der Sprache gemessen.

960 Wer tugendhaft sein will, begehre die Scham; es üb' sich in Demut, wer edel* sein will.

## 97 மானம்

961 இன்றி யமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல்.

962 சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

963 பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.

964 தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை.

965 குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்.

966 புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதல் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை.

967 ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.

968 மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து.

969 மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

970 இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு.

961 Vermeide alles, was dich erniedrigt, auch um deines Lebens kostbaren Preis.

962 Wer einen ehrbaren Namen will tragen, enthalte sich allen unrechten Tuns, erwürbe er dadurch auch Ruhm.

963 In Tagen des Wohlstands bleibe bescheiden; bewahre Würde in Zeiten der Not.

964 Wer seinen Namen beschmutzt, der gleichet dem abgeschnittenem Haar, das in die Gosse geworfen.

965 Wer auch gewaltig ist wie ein Berg und Unrecht begeht, mag es auch sein wie ein Sesamkorn klein, ist dennoch ein Winzling.

966 Warum denn denen schmeicheln, die dich doch verachten? Es bringt weder Ehren, noch öffnet es himmlisches Tor.

967 Besser ist 's, auf der Stelle in Ehren zu sterben, als denen zu dienen, die dich nur verachten und schmähen.

968 Ist denn der Leib unsterblicher Art, daß man ihn retten will auch um den Preis seiner Ehr'?

969 Es stirbt das Reh*, verliert es das Fell; so setzen die Edlen dem Leben selber ein Ende, ist ihnen die Ehre genommen.*

970 Der Edle kann den Verlust seiner Ehre nicht länger ertragen; andächtig faltet die Welt ihre Hände und preiset ihn an des Ruhmes Altar.

# 98 பெருமை

971 ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு
அஃதிறந்து வாழ்தும் எனல்.

972 பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

973 மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.

974 ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.

975 பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்.

976 சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு.

977 இறப்பே புரிந்த தொழிற்றும் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

978 பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.

979 பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல்.

980 அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

## 98 Wahre Größe

971 Das Streben nach höheren Zielen bedeutet wahrhaftige Größe. Wer sagt: "Ich kann auch ohne sie leben!" ist ohne Bedeutung.

972 Die Menschen werden auf gleiche Weise geboren; ihr Ansehen, das sie genießen, ist dennoch verschieden, weil jeder sein Leben anders verbringt.*

973 Unwürdige sind doch niederen Ranges, sind sie auch hoch von Geburt; der Edelgesinnte hat seinen Platz hoch über den andern trotz niederer Herkunft.

974 Wie eine Frau ihre Reinheit bewahrt, kann wahre Größe er nur erlangen, der sich vor Niedrigkeit schützt.

975 Wer groß ist im Herzen, wird Großes vollbringen; die andern vermögen es nicht.

976 Wer ohne Bedeutung, verachtet die Großen, und niemals wird deren Gunst ihm zuteil.

977 Die Dreistigkeit derer mit unbedeutendem Wesen kennt keine Grenzen, lacht ihnen das Glück*.

978 Die wahrhaft Großen sind immer bescheiden; wer aber gering und bedeutungslos ist, posaunet seine vermeintliche Größe hinaus in die Welt.

979 Wahrhaftige Größe ist immer bescheiden; wer aber gering und bedeutungslos ist, rühmet und preiset sich selbst.

980 Die wahrhaftig Großen decken die Fehler der anderen zu; wer aber gering und bedeutungslos ist, geht mit den Schwächen der andern hausieren.

## 99 சான்றாண்மை

981 கடன்என்ப நல்லவை எல்லாம் கடன் அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

982 குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று.

983 அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்.

984 கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

985 ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

986 சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.

987 இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

988 இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்.

989 ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்.

990 சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை.

981 Wer nach Vollkommenheit strebt, dem ist das Streben nach Gutem natürliche Pflicht.

982 Ein gutes Wesen ist dem Vollkommenen einziges Gut; anderes Gut ist nur dem Namen nach gut.

983 Ein Herz voller Liebe und Liebe zur Wahrheit, freundliche Nachsicht für anderer Schwächen, Schamgefühl und Freigiebigkeit sind eines edlen Wesens fünf tragende Säulen.

984 Der Bußübung Kern ist, niemals zu töten*; Vollkommenheit heißt, nicht schlecht von den andern zu reden.

985 Demut ist die wahrhaftige Stärke des Starken; sie ist des Vollkommenen wehrhafte Rüstung gegen den Feind.

986 Maßstab* für die Vollkommenheit ist, auch Überlegenheit derer zu tragen, die ohne Bedeutung.

987 Was nützt die Vollkommenheit, wenn man nicht denen Gutes erweist, die einem Böses getan?

988 Armut ist dem keine Schmach, der ein vollkommenes Wesen und damit den wahren Reichtum besitzt.

989 Mag auch die Zeit Erschütterung bringen und heute nicht gelten, was gestern noch galt: Wer standhaft den Weg der Rechtschaffenheit geht, ist der Vollkommenheit Hort*.

990 Verließen die Weisen den Pfad aller Weisen,* ertrüge die Erde die Menschen nicht mehr.

# 100 பண்புடைமை

991 எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு.

992 அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு.

993 உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு.

994 நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு.

995 நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

996 பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

997 அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போலவர்
மக்கட்பண்பு இல்லா தவர்.

998 நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

999 நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்.

1000 பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று.

## 100 Gutes Wesen*

991 Gutes Wesen, so heißt es, kann leicht erwerben, der jeden mit offenen Armen umfängt.*

992 Tugenden, welche ein gutes Wesen bezeugen, sind Freundlichkeit gegen jedermann und ein edles Geblüt.

993 Nicht Ähnlichkeiten von Äußerlichkeiten sind, was die Menschen vereint, doch gutes Verhalten.

994 Die Welt rühmet dessen Verhalten, der hilfsbereit, gerecht und rechtschaffen ist.

995 Schmerzlich verletzen spöttische Worte, werden sie auch im Scherz nur gesagt; der Wohlgeartete aber ist guten Verhaltens auch gegen den Feind.

996 Wegen der Menschen mit gutem Wesen besteht diese Welt; gäbe es nicht solche Menschen, zerfiele die Erde zu Staub.

997 Mögen die Menschen mit niedrigem Wesen auch wachen Verstand so scharf wie die Feile besitzen, sie sind doch nicht besser als Klötze aus Holz.

998 Es bringet den Menschen zu Fall, ist er schlechter Art selbst gegen den, der Haß in sich trägt und Unrechtes tut.

999 Allüberall auf der weiten Erden herrschte doch Dunkel am hellichten Tag, gäbe es nicht das Licht eines freundlichen Lächelns.

1000 Wohlstand in Händen des ungehobelten Klotzes ist nutzlos wie die verdorbene Milch im schmutzigen Krug.

## 101 நன்றியில் செல்வம்

1001 வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்தது இல்.

1002 பொருளானாம் எல்லாமென்று ஈயாது இவறும்
மருளானாம் மாணாப் பிறப்பு.

1003 ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

1004 எச்சமென்று என்எண்ணுங் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன்.

1005 கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல்.

1006 ஏதம் பெருஞ்செல்வம் தான்றுவ்வான் தக்கார்க்கொன்று
ஈதல் இயல்பிலா தான்.

1007 அற்றார்க்கொன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று.

1008 நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

1009 அன்பொரீஇத் தற்செற்று அறநோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

1010 சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனையது உடைத்து.

## 101 Geiz*

1001 Wer Wohlstand anhäuft und ihn nicht genießet und nutzt*, gleicht einem Toten.

1002 Ein Geizhals, der glaubt, sein Reichtum sei alles auf Erden, und nichts davon gibt, wird wiedergeboren als ein verrufener Geist.*

1003 Er ist der Welt eine schreckliche Last, der Reichtum scheffelt und nicht daran denkt, unsterblichen Ruhm zu erwerben.*

1004 Was nennt ein Geizhals, den niemand mag, denn nach dem Tode sein eigen?

1005 Wer weder anderen hilft noch seinen Reichtum genießt, besitzet trotz vieler Millionen in Wirklichkeit nichts.

1006 Wer nicht seinen Reichtum genießt und denen nicht gibt, die es doch verdienen, des Wohlstand ist nichts als schreckliche Last.

1007 Des elenden Geizhalses großes Vermögen, welcher den Armen nicht hilft, ist wie ein ehrbares Mädchen, das einsam die Jugend verspielt.

1008 Der Reichtum des, den jedermann haßt, ist wie ein Baum mit giftiger Frucht im Herzen des Dorfes.

1009 Der Geizhals, der Schätze anhäuft und lieblos und ungerecht ist, hortet den Reichtum letztlich nur für die Fremden.

1010 Der Kummer des Reichen, der alles verloren, weil er die Not der Armen nicht litt, dauert nicht lang; er ist wie die Wolke, die Regen verschenkte und bald wieder gibt.

## 102 நாணுடைமை

1011 கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

1012 ஊணுடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

1013 ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு.

1014 அணிஅன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்
பிணிஅன்றோ பீடு நடை.

1015 பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு.

1016 நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

1017 நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாண்ஆள் பவர்.

1018 பிறர்நாணத் தக்கது தான்நாணா னாயின்
அறம்நாணத் தக்கது உடைத்து.

1019 குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை.

1020 நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று.

## 102 Schamgefühl

1011 Die Würdigen erröten vor Scham über schändliches Tun; ein schönes Mädchen errötet aus anderem Grund.

1012 Nahrung und Kleidung und anderes* haben die Menschen gemein; das Schamgefühl unterscheidet sie voneinand'.

1013 Alles, was lebt, hat im Leib sein Zuhaus; vollkommene Tugend ist in der Scham.

1014 Ist nicht das Schamgefühl Zierde der Weisen? Ist nicht des Schamlosen Prahlen leibhaftige Schand'?

1015 Wer vor Scham über Schande der andern errötet, als wäre fremde Schande die eigene Schmach, ist aller Welt der Sittsamkeit Hort.

1016 Selbst alle Schätze der Welt, erworben, daß man errötet vor Scham, lehnen die Würdigen ab.

1017 Wer Schamgefühl hat, gäbe lieber sein Leben, die Scham zu bewahren, als sie zu verlieren, das eigene Leben zu retten.

1018 Wer nicht über Dinge errötet, derer sich andere schämen, über den errötet die Tugend selber vor Scham.

1019 Wer gegen Brauch und Sitte verstößt, der schändet seiner Familie Ruf und wird sie verlieren; wer ohne Schamgefühl ist, wird alles verlieren, was gut.

1020 Wer sich nicht schämen kann, der lebet doch nicht; er gleichet hölzernen Marionetten, die Leben an dünnen Fäden vorgaukeln.

## 103 குடிசெயல் வகை

1021 கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுடையது இல்.

1022 ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்
நீள்வினையால் நீளும் குடி.

1023 குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

1024 சூழாமல் தானே முடிவெய்தும் தம்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு.

1025 குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு.

1026 நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்.

1027 அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை.

1028 குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும்.

1029 இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு.

1030 இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லாள் இலாத குடி.

